# வைதிக தர்ம வர்த்தனீ



புதுக்கோட்டை ஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகளை
ஆசிரியர் உபசரித்த காட்சி.

மலர் 21
இதழ் 4

பிலவங்க ௵
தை ௴

அமமே நாராயணா !

## உலக நன்மைக்கு

# அகண்ட தீபப்பிரதிஷ்டை

சென்னை அரண்மனைக்காரத் தெருவில் வீற்றிருக்கும் ஸ்ரீ ஸௌந்தராம்பிகா சமேத கச்சபேஶ்வரர் ஆலயத்திலும், தம்பு செட்டித்தெருவில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ காளிகாம்பாள் கமடேஸ்வரர் என வழங்கும் ஸ்ரீ காமாக்ஷி சந்நிதியிலும், லிங்கிச் செட்டித்தெருவில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ மரகதம்பாள் சமேத மல்லிகேஸ்வரர் ஆலயத்திலும், பவழக்காரத் தெருவில் காட்சியளித்துக் கொண்டிருக்கும் ஸ்ரீ ஞானப்ரஸூனாம்பிகா சமேத காளஹத்தீஸ்வரர் ஆலயத்திலும் (14—1—65) வியாழக்கிழமையிலிருந்து அகண்ட தீபங்கள் ஜகத்குரு ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் அனுக்ரஹத்துடன் உலக நலத்திற்காகப் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. பக்த கோடிகள் இத்தீபங்கள் என்றும் பிரகாசமாய் ஒளி வீச தங்களால் இயன்ற பொருளுதவியோ (சுத்தமான நல்லெண்ணை) பண உதவியோ அல்லது இரண்டுமோ செய்து இந்நற் காரியத்தில் பங்கு கொண்டு இறைவனுடைய திருவருளைப் பெறுமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இக்கார்யத்தில் பங்குகொள்வதால் அடையக்கூடிய சில பலன்கள்.

ஆயுள் வளரும், கண்கள் பிரகாசமாய் என்றும் தெரியும், செல்வம் செழித்து ஓங்கும், சகலவிதமான துன்பங்களும் அகலும், என்றும் மன அமைதி நிலவும்.

பொருள், பண உதவி செய்யவேண்டிய இடம்.

சென்னை,

**ஸ்ரீ ராம பவான் (R. S. நாராயணசுவாமி ஐயர்)**

46, தம்பு செட்டித்தெரு, சென்னை–1.

यतो धर्मः ततः कृष्णः　　　　यतः कृष्णः ततो जयः

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

# வைதிக தர்ம வர்த்தனீ

ஆசிரியர் : ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம், சென்னை 33.

காரியாலயம்:- கடவாசல், சீர்காழி-கடவாசல் P. O.
சீர்காழி வழி. (தஞ்சைஜில்லா) S. India. போன் நெ. 287

வருஷ சந்தா ரூ. 5. : : தனிப்ரதி 50 ந. பை.

மலர் 21 | பிலவங்கஹு தைமீ | இதழ் 4

## பொருள் அடக்கம்.

## பிரார்த்தனை.

### ஸ்ரீ ஸுப்ரமண்ய புஜங்க ஸ்தோத்திரம்.

मयूराधिरूढं महावाक्यगूढं
मनोहारिदेहं महच्चित्तगेहम् ।
महीदेवदेवं महावेदभावम्
महादेवबालं भजे लोकपालम् ॥ ३ ॥

*மயூராதிரூடம் மஹாவாக்ய கூடம்*
*மனோஹாரி தேஹம் மஹச்சித்த கேஹம் ।*
*மஹீதேவ தேவம் மஹா வேத பாவம்*
*மஹாதேவ பாலம் பஜே லோகபாலம் ॥*

மயிலின்மீதேறியிருப்பவரும், மஹாவாக்யங்களின் ரஹஸ்யமாயிருப்பவரும், அழகான மேனி உள்ளவரும், மஹான்களின் மநதிலிருப்பவரும், வேதியருக்கு தேவனும் ஶிவனது சிந்தையும் லோக ரக்ஷகனுமான சிவகுமாரனை பஜிக்கிறேன்.

### சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்.

1 தங்கள் **நண்பர்களையும் பந்துக்களையும்** இதில் சந்தாதாரர்களாக சேர்க்க வேண்டுகிறோம்.

2 தாங்கள், சந்தா தொகை அனுப்பும் போது மறவாமல் தயவுசெய்து *சந்தா நம்பரைக்* குறிப்பிடுங்கள். புதியவரானால் *புதிது* என்று எழுதுங்கள்.

3 விலாசம் மாறுதலை **உடன்** காரியாலயத்திற்கு எழுதுங்கள்.

4 ஆங்கிலமாதம் *25ந்தேதிக்குப்* பிறகு அந்த மாத காப்பி கிடைக்கவில்லை என்றால் எழுதுங்கள்.

5 தவறுதலாக இரண்டு காப்பிகள் வந்தால் ஒன்றைத் திருப்பி அனுபபி, எதனால் வந்தது என்று தெரிவியுங்கள்.

6 சந்தாவைக் கடவாசல் காரியாலயத்திற்கே அனுப்பி வையுங்கள். அது இருவருக்கும் ஸௌகர்யம். **ஆசிரியர்.**

---

**பாபத்தை செய்யாமலாவது இரு**

# அம்பாளின் சுக்ரவார தரிசனம்

தியாக கான லோல T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

## திருவோற்றியூர் பஞ்சரத்னம்–2

ஸத்குரு ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் பரந்தமனம், அம்பாளுடைய ஸந்நிதியில் எப்படி பரவசப்பட்டு பக்தியில் திளைத்திருக்கிறது என்பதற்கு அவருடைய அமிருத வாக்கே நிதர்சன ஸாக்ஷியாகும். அம்பாளுடைய அழகை வர்ணிக்க தெலுங்கு பாஷையும், ஸம்ஸ்கிருத பாஷையும் அழகுடன் அவருடைய வாக்கில் பிரகாசிக்கிறது. ஸங்கீதாம்சமோ அவருடைய ஹ்ருதய பாஷை. தேனும், பாலும், முக்கனியும், கூட்டிச் சேர்த்துவிட்டது போல். தான் அடைந்த அம்பிகை திரிபுரஸுந்தரியின் தரிசன பாக்யத்தை இந்த கீர்த்தனத்தாலும் வர்ணிக்க காண்கிரோம்.

ராகம்–கல்யாணி] பல்லவி [தாளம்–ஆதி

ஸுந்தரி நீ திவ்ய ரூபமுனு சூட
தனகு தொரி கெனம்மா— (ஸு)

அனுபல்லவி

மந்த கமன நீது கடாக்ஷ பலமோ
முந்தடி பூஜாபலமோ திரிபுர (ஸு)

சரணங்கள்

1 புவிலோ வரமௌ ஸ்ரீமதாதி புரமுன
நெலகொன்ன நீ ஸொகஸுவினி
ஸுவிவேகுலைன ப்ரும்மாதி ஸுருலு கும்புகூடி
கவி வாஸரபு ஸேவகனுங்கொன
கலுகுஜயனி கரகுசு மதிலோ

திவிதத்தாமு படுசு னுண்டகா
தீன ஜனார்த்திஹாரிணி த்ரிபுர (ஸு)

2 கலிலோ தீன ரக்ஷகியனி ஸப
கலிகின தாவுன பொகடுதுனம்ம
ஸலலித குண கருணா ஸாகரி நீ ஸாடி எவரம்மா
அலஸி வச்சினந்து நாமனஸு
ஹாயி செந்துனயனியுண்டகமரி
கலகலமனி ஸுரஸதுலு வருஸகா
கொலுசு சுக்ரவாரபு முத்து த்ரிபுர (ஸு)

3 நனு கன்ன தல்லி நாஜன்மமு
நாடே ஸபல மாயெனம்மா இபுடு
கன தரித்குனிகி பைகமுவலெ
கனுல பண்டுவுகா
வனஜ நயனவினுமு யெண்டு பைருலகு
ஜலமு வலெ சுபதாயகி காம
ஜனகுனி ஸோதரி ஸ்ரீ தியாகராஜ
மனோஹரி கௌரி ஓ த்ரிபுர — (ஸு)

*(பல்லவி)*

பொருள் :- ஹே—(த்ரிபுர) ஸுந்தரியே! உன்னுடைய திவ்ய ரூபத்தை தரிசிக்க எனக்குக் கிடைத்ததம்மா.

**அனுபல்லவி**

மந்தகமன – மெதுவான நடையழகுடைய தாயே! (எனக்குக் கிடைத்த இந்த திவ்ய தரிசனம்) உன்னுடைய கடைக்கண் திருவருளன்றோ! அல்லது முன்பு நான் செய்த பூஜா பலமோ.

அம்பிகையின் திருவருளைப் பெறுவதற்கு அம்பிகையின் திரு அருளே காரணமாகும். திவ்ய தரிசனம் இன்று எனக்குக் கிடைத்ததென்றால் அதற்கு நான் முன் ஜன்மத்தில் பூஜைகள் புண்ணியம் பல புரிந்திருக்கவேண்டும்.

---

சிலது கடுமையான பாபம்

சரணம்

1 புவியில் சிறப்புள்ள ஆதிபுரமெனும் பெயர் கொண்ட இந்த திருவொற்றியூரில் வீற்றிருக்கும் உன் அழகை கேட்டு, ப்ரும்மாதி தேவர்கள் நல்ல விவேகமுடன் கூட்டமாகக்கூடி, இந்த கவிவாஸரம் சுக்ரவாஸரத்தில் (கவீனும் அசுரகவி: என்று சுக்ரரை கவி என்றபதத்தால் சொல்லி வெள்ளிக்கிழமையில் உன் தரிசனம் பெறக் கிடைக்குமா என்று மனத்தால் உருகி, ஆகாசத்தில் தடுமாற்றமடைந்த ஏக்கமுடன் உன் ஸந்நிதி வந்தடைந்தனர். என் போன்ற ஏழைகளின் துயரத்தைப் போக்குவாய். (ப்ரும்மாதி தேவர்களுக்கும் கிடைக்க இயலாத தரிசனம் இந்த ஏழைக்குக் கிடைத்தது)

2 கலியில் தீன ரக்ஷகி என்று ஸபைகளில் உன்னை புகழ்வேன். எளிய குணம் கொண்ட கருணாஸாகரீ! உனக்கு நிகர் யார் தாயே! களைத்து வந்த எனக்கு, ஹாயி, ஸுகம் கிடைக்குமா என்று நான் இருக்கிறேன். இந்தத் தருணம் கலகலவென்று தேவதாஸ்த்ரீகள் உனக்கு பணிவிடை வரிசையாக செய்ய வரும் இந்த சுக்ரவாரத்தில் அழகிய திரிபுரஸுந்தரியே!

3 என்னைப் பெற்றதாயே! என் ஜன்மம் இன்றே பயன் அடைந்து விட்டதம்மா! இன்று பரம ஏழைக்கு பணம் கிடைத்தாற்போல கண்களுக்கு விருந்து. தாமரைக் கண்கள் கொண்ட அன்னையே! காய்ந்த பயிருக்கு (மழை) தண்ணீர் போல சுபத்தை அளிப்பவளே! காமஜனகனை என் ராமனுடைய ஸஹோதரி, ஸ்ரீ தியாகராஜ மனோஹரி, கௌரீ, த்ரிபுரஸுந்தரீ! (உன் தரிசனம் எனக்கு பெரும் பாக்யம்மா)

கருத்து :— திருவொற்றியூர் அம்பிகையின் வெள்ளிக்கிழமை தரிசனம் இன்றும் நாளையும் கூட தனி சிறப்புள்ளது. அன்று அதைப்பெற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் எப்படி தன் அதிர்ஷ்டத்தை நினைந்து நினைந்து உருகுகிறார். அம்பிகையின் தரிசனம் பெற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் தன் இஷ்ட தெய்வமான ராமனையும் மறக்காமல், நீ யார்? என் ராமனின் ஸஹோதரியல்லவா, இந்த வைபவம் எனக்குக் கிடைத்தது என்று பொங்கிபுளகாங்கிதமடைகிறார்.

---

## ஸ்ரீ மஹா ம்ருத்யுஞ்சய ஸஹஸ்ர நாமாவளி.

| | | |
|---|---|---|
| ओं सरस्वते नमः | ஓம் ஸரஸ்வதே நம: | |
| सत्यवाचे नमः | ஸத்யவாசே நம: | |
| सत्याय नमः | ஸத்யாய நம: | |
| सत्यरूपाय नमः | ஸத்யரூபாய நம: | |
| सुधिये नमः | ஸுதி[1]யே நம: | |
| सुखिने नमः | ஸுகி[2]நே நம: | |
| सुराजे नमः | ஸுராஜே நம: | |
| सत्याय नमः | ஸத்யாய நம: | |
| सत्यमतये नमः | ஸத்யமதயே நம: | |
| रुद्राय नमः | ருத்ராய நம: | 210 |
| रुद्रवपुषे नमः | ருத்ரவபுஷே நம: | |
| वसवे नमः | வஸவே நம: | |
| वसुमते नमः | வஸுமதே நம: | |
| वसुधानाथाय नमः | வஸுதா[4]நாதா[2]ய நம: | |
| वसुरूपाय नमः | வஸுரூபாய நம: | |
| वसुप्रदाय नमः | வஸுப்ரதாய நம: | |
| सर्वदेवानांईशानाय नमः | ஸர்வதேவாநாம் ஈஶாநாய | |
| सर्वबोधिनां ईशानाय नमः | ஸர்வபோதிநாம் ஈஶாநாய நம: | |
| ईशाय नमः | ஈஶாய நம: | |
| अवशेषाय नमः | அவஶேஷாய நம: | 220 |
| अवयविने नमः | அவயவிநே நம: | |
| शेषशायिने नमः | ஶேஷஶாயிநே நம: | |
| श्रियःपतये नमः | ஶ்ரிய:பதயே நம: | |
| इन्द्राय नमः | இந்த்ராய நம: | |
| चन्द्रावतंसिने नमः | சந்த்ராவதம்ஸிநே நம: | |

---

ஹிம்ஸை செய்யாதே

ओं चराचरजगत्स्थितये नमः  ஓம் சராசரஜகத்ஸ்தி$^{2}$தயே நம:

स्थिराय नमः  ஸ்தி$^{2}$ராய நம:

स्थाणवे नमः  ஸ்தாணவே நம:

अणवे नमः  அணவே நம:

पीनाय नमः  பீநாய நம:  230

पीनवक्षसे नमः  பீநவக்ஷஸே நம:

परात्पराय नमः  பராத்பராய நம:

पीनरूपाय नमः  பீநரூபாய நம:

जटाधारिणे नमः  ஜடாதா$^{4}$ரிணே நம:

जटाजूटसमाकुलाय नमः  ஜடாஜூடஸமாகுலாய

पशुरूपाय नमः  பஶுரூபாய நம:

पशुपतये नमः  பஶுபதயே நம:

पशुज्ञानिने नमः  பஶுஜ்ஞானிநே நம;

पयोनिधये नमः  பயோநிதயே நம:

वेद्याय नमः  வேத்யாய நம:  240

वेदमयाय नमः  வேதமயாய நம:

विधीज्ञाय नमः  விதி$^{4}$ஜ்ஞாய நம:

विधिमते नमः  விதி$^{4}$மதே நம:

मृटाय नमः  ம்ருடாய நம:

शूलिने नमः  ஶூலிநே நம:

शुभंकराय नमः  சுபங்கராய நம:

शोभ्याय नमः  ஶோப்$^{4}$யாய நம:

शुभकर्त्रे नमः  ஶுப$^{4}$கர்த்ரே நம:

शचीपतये नमः  ஶசீபதயே நம:

शशांकधवलाय नमः  ஶஶாங்கதவளாய நம:  250

---

உடலால் ஹிம்ஸை, அடிப்பது

## வைதிக தர்ம வர்த்தனீ 21ம் ஆண்டு

# விழாவும் பட்டம் அளிப்பும்.

*1—1—1968*ல் அம்பத்தூர் மௌனஸ்வாமிகள் மடத்தில் ஆசிரியர், ஸ்வாமிகளுக்கு காணிக்கையுடன் பிக்ஷாவந்தனம் செய்தார். ஸ்வாமிகள் பீடத்தில் அமர்ந்த பின் ஸ்ரீ வத்ஸ ஸோமதேவ சர்மா பல இடங்களிலிருந்து வந்திருந்த பக்தர்கள் அனைவரையும் வரவேற்றார்.

சாதுக்கள் ஒன்று சேருவது சிறந்த புண்யத்தினாலேயே ஆகும். அன்று திரௌபதி சொன்னவண்ணம் ஞான விருத்தர், வயோ விருத்தர் சீல விருத்தர், தன விருத்தர் முதலியவர் சூழ்ந்தது இந்த சபை. இதில் சாமப்ரியரான தக்ஷிணாமூர்த்தியே சபாபதியாக வீற்றிருக்கிறார். வயோவிருத்தரும், சீல விருத்தரும், கான விருத்தருமான செம்பை வைத்யநாத பாகவதரும், ஞான விருத்தரும் கானவிருத்தருமான நீதிபதி ஸ்ரீ T. L. வெங்கடராமய்யர் அவர்களும், சீல விருத்தரும், தன விருத்தருமான ஸ்ரீ வைத்ய சுப்பிரமணிய அய்யரும், குரு பக்தரும், தார்மிகருமான ஸ்ரீ ராமசந்திர அய்யரும், ஸ்ரீ N. S. ராமநாதனும், ஸ்ரீ Y. முத்துஸ்வாமியும் மற்றும் சிறந்த பக்தர்களையும், வரவேற்கும் பாக்யம் பெற்றேன்.

தர்ம ப்ரசாரத்தையே முக்கிய நோக்கமாகக் கொண்ட வைதிக தர்மவர்த்தினியை என்னை நிமித்தமாகக் கொண்டு தர்ம தேவதை இதை ஆரம்பித்தது. அது கடலில் கப்பல் தத்தளிப்பது போல் தவிக்கும்

---

*வாயால் திட்டுவதும் ஹிம்ஸை*

போது நங்கூரம்போல் ஸ்ரீ வைத்ய சுப்பிரமணிய அய்யரவர்களும், ஸ்ரீமௌனஸ்வாமிகளும், அபயப்ரதானமளித்துக் காப்பாற்றுகின்றனர். இதைப் போஷிக்கும் ஸ்ரீ N. S ராமநாதனும், சுவாமிகள் அளித்த 'த்யாக கான லோலா' என்ற பட்டத்தையே பொற்பதக்கத்தில் அமைத்துத் தந்தார்.

அக்ரூரரைப் போல் கிருஷ்ணபக்தியில் ஈடுபட்ட ஸ்ரீ K. ராமச்சந்திர அய்யரவர்கள் 'குணரஸம்' என ஸ்வாமிகள் அளித்த ஸ்ரீவத்ஸ ஜெயராம சர்மா அவர்களின் பட்டத்தைப் பொற்பதக்கத்தில் பொறித்தார்.

ஒவ்வொரு ஆலயங்களுக்கும் சென்று படமெடுத்து ஆங்காங்குள்ள ஆலய மஹிமையை எழுதிவரும் ஸ்ரீ N. கிருஷ்ணனுக்கு 'சித்திரகலாநிதி' என்ற பட்டத்தை ஆசிரியர் பொற்பதக்கத்தில் அமைத்துத்தந்தார். இவைகளை அளித்து சபையை நன்கு நடத்திவைக்கவேண்டுமென்று தலைவருக்கு மாலையிட்டார்.

## தலைவரின் உரை.

ஈ தினமே சுதினமோ என்று தியாகய்யர்வாள் கூறியது போலே இந்நாள் நமக்கெல்லாம் நன்நாள் டில்லி, பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் ஸ்ரீ T S பாலகிருஷ்ண சாஸ்திரிகள் செய்துவரும் ஸத்கதாகாலக்ஷேபத்தைப் பலமுறைகேட்டு ஆனந்தித்திருக்கிறேன். சங்கீதம், சாஹித்யம், ப்ரவசனம், மூலமாக பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஆனந்தாமிருதத்தை ஊட்டி வருகிறார், தியாகோபனிஷத் என்று கீர்த்தனங்களை வெகு ரஸமாக வைதிக தர்ம வர்த்தனியில் எழுதிப்பலர் உள்ளத்தைப் பரவசப் படுத்துகிறார். இவருக்கு 'தியாக கான லோலா' என்ற பட்டம் மிகப் பொருத்தமானது. ஸ்வரதேவதைகளை நன்கு அறிந்து அபஸ்வரமில்லாமல்

---

பாடவேண்டுமென்ற தியாகராஜரின் கொள்கையைப் போல அழகாகப் பாடுகிறார் என்று கூறும் போது தியாகராஜன் கிருதிகளை அழகாகப் பாடியதுடன் 'த்யாககான லோலா பாலகிருஷ்ணன் சோரா' என்று தியாகய்யர் கிருதியைப் போல் அமைத்துப் பாடினார். சபையில் ஒரே கரகோஷம். T S பாலகிருஷ்ண சாஸ்திரிகளை அழைத்து மெடலை அளித்தார்.

பெரியோர் குலத்தில் பிறப்பதோர் பாக்யம். அவர்கள் பின்பற்றிய வழியைக் கைக்கொள்வது அதிலும் பாக்யம். 50 வருஷமாக ஸ்ரீ சர்மாவுடன் பழகியிருக்கிறேன். அவரது பாண்டித்தியத்தையும், ஆசாரத்தையும், தர்மபிரசாரத்தையும், எழுதிய பல நூல்களையும், வைதிக தர்ம வர்த்தனியையும் பார்த்து வருகிறேன். M. A., படித்தும், உத்தியோகத்தில் இருந்தும், ஸ்ரீவத்ஸ ஜெயராம சர்மா அவர்கள் முன்னோர் ஆசாரத்தை விடாமல் நற்குணமுள்ளவராகவும், ரஸிகராகவும் இருந்து காலக்ஷேபம் செய்கிறார். புராணங்களிலுள்ள பற்பல அரிய கதைகளை ரஸமாக எல்லோரும் ருசியாக படிக்கும்படி வைதிக தர்ம வர்த்தினியில் எழுதி வருகிறார். சுவாமிகள் 'குணரஸம்' என்ற பட்டத்தை குணரஸம் என்ற தலைப்பின்கீழ் வைதிக தர்ம வர்த்தனியில் எழுதிவரும் இவருக்கு அளித்தது மிகப் பொருத்தமாக உள்ளது எனக் கூறி அவருக்கு அளித்தார்.

தக்ஷிணதேசத்தில்தான் எண்ணிறந்த சிவ விஷ்ணு க்ஷேத்ரங்கள் நிறைந்திருக்கின்றன. ஆலயங்கள் மூலமாகத்தான் ஆஸ்திக்யமும், பக்தியும் வளரும். ஒவ்வொரு க்ஷேத்திரமாகச் சென்று படமெடுத்து க்ஷேத்திர மஹிமையையும் சிறந்த முறையில் ஸ்ரீ N கிருஷ்ணன் வைதிக தர்ம வர்த்தினியில் வெளியிட்டு வருகிறார். யாத்திரை செல்லமுடியாதவர் இப்பத்திரிகை மூலம்

இதை நன்கு தரிசித்துப்புண்ணியம்பெறலாம். ஆதலின் 'சித்திர கலாநிதி' மிகப் பொருத்தமானது என்று அவருக்கு பதக்கமளித்தார்.

சங்கீத வித்வான்களில் மிகச் சிறந்தவரும் அபர வயதிலும், கண, கணவென்று வெண்கலமணி போல் சப்திக்கும் சாரீரமுள்ளவருமான ஸ்ரீ செம்பை வைத்திய நாத பாகவதர் அவர்கள் சாஸ்திரிகளைக் கொண்டாடும் போது பஞ்சாபகேச பாகவதர், சிதம்பரபாகவதர். சௌந்தரராஜ பாகவதர் முதலியவர்களைப் போல், இவர் சிறந்தமுறையில் காலக்ஷேபம் செய்கிறார். இவர் கதை ஒன்றுக்குத்தான் நான் போவது வழக்கம் என்று என் கச்சேரியும் நிறுத்திவிட்டு இங்கு வந்திருக்கிறேன். இவர் என்றென்றும் சிரஞ்சீவியாக இருக்கவேண்டு மென்று ஆசீர்வதித்தார். 'சம்போ மகாதேவா' என்ற கீர்த்தனையையும் உடனே பாடினார்.

### ஸ்ரீ வைத்ய சுப்பிரமணிய அய்யர் கூறியது.

இப்பெருஞ்சபையில் கலந்துகொள்வது எனக்கே பெருமை தரும். வைதிக தர்ம வர்த்தினியின் 21ம் அண்டுவிழா ஸ்ரீ புவனேஸ்வரி பீடத்தில் நடப்பது மிகச் சிறந்ததாகும். இதன் ஆசிரியர் இதில் வேதம், தர்ம சாஸ்திரம், புராணம், கர்மானுஷ்டானம் முதலிய பற் பல உபயோகமான விஷயங்களை வெளியிடுகிறார். நம் சமூகம் இதை நன்கு ஆதரிக்கவேண்டும். இது நிற்கா மல் மேன்மேலும் வ்ருத்தியாகி நிரந்தரமாக நடைபெற வேண்டும். இது படித்துப்போடத்தக்க விஷயமில்லை. குடும்பத்திற்கு நிதி போல் சேர்த்துவைக்கக்கூடிய பத்திரிகையாகும். இதில் ஸ்ரீ பாலகிருஷ்ணசாஸ்திரிகள் தியாகராஜ கீர்த்தனம் என்ற பெயரால் விஷயதானம் செய்துவந்தார். பக்தியுடன் வேதாந்தத்தையும் புகட்டி

வரும் மேற்படி கீர்த்தனங்களைத்தான் பாடி அனுபவித்து தியாகோபனிஷத் என்ற பெயரால் எழுதி வருகிறார். கதையை அனுசரித்துவரும் விஷயங்கள் ஒட்டிவரும் ஹாஸ்யம் மிக ரஸமாகக் கூறுகிறார். வைதிக தர்ம வர்த்தனியிலும் வரும் ஹாஸ்யரஸங்கள் தர்மத்தை ஒட்டியே காணப்படுகிறன்றன என்றார். (இவர் ஆசிரியருக்கு பொன்னாடையும், நவரத்தின மாலை யுமளித்தவர்.)

டாக்டர் கிருஷ்ணஸ்வாமி அவர்கள் தியாகராஜ கீர்த்தனங்களின் பெருமைகளை அவரவர் பரிபாகத்திற் கேற்றபடி வர்ணிக்கின்றனர் என்று பல உதாஹரணங் கள் காட்டி ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகளின் சங்கீதத்தை மிக மிகக் கொண்டாடினார்.

ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரிகள், மௌனஸ்வாமிகளை யும், செம்பையையும், தலைவரையும் கொண்டாடி தியாகராஜரைப்பற்றிப்பேசும்போது மெய்ம்மறந்து பேசி னார். ஸ்ரீ ஜெயராம சர்மா தன் குருவான சாஸ்திரிகளை சன்மானம் செய்யும் மேடையில் தன்னை சம்மானிப்பது திருஷ்டி பரிகாரமாகும் என்று எல்லோர் உள்ளத்தை யும் கவரும்படி பேசினார். மாலை 6 மணிக்கு ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்திரிகள் அவர்கள் தியாகராஜ சரிதம் என்ற காலக்ஷேபத்தின் மூலம் சங்கீத வித்வான் களையும், பக்தர்களையும் பரவசப்படுத்தி ஆனந்தத்தில் அமிழ்த்தினார். சுவாமிகள் அனைவரையும் ஆசீர்வதித்து பிரசாதம் அளித்தார். ஸ்ரீ Y. முத்துஸ்வாமி ஜீவிய மெம்பராகச் சேர்ந்தார்.

சுபம்.

---

*பிறர் பொருளில் ஆசை வைக்காதே*

# மாமாங்கம்.



(மஹாமகம் மாசி 2உ புதன்)

## ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரர்

புண்ணிய பூமியான பரதகண்டத்திலே தென்னாட்டிலே கும்பகோண நகரமானது மகிமை பொருந்திய கோவில்களும் தீர்த்தங்களும் கொண்ட ஓர் புண்ணிய ஸ்தலம். மேன்மையுற்ற சோழவள நாட்டிலுள்ள தஞ்சை மாவட்டத்திற்கு இது ஒரு புராதன நகரம். இதற்குக் கும்பகோணம் என்றும் "திருக் குடந்தை" என்றும் "பாஸ்கர க்ஷேத்திரம்" என்றும் பலவித பெயர்கள் உண்டு. இது புராணங்களிலும் தேவாரம் திருவாய் மொழி முதலியவற்றிலும் புகழப்பட்டிருக்கிறது.

## புராண வரலாறு.

ஆதிகாலத்தில் உலகப் பிரளயம் நேரிடுவதற்கு முன்பு, பிரும்மதேவர் அப்பிரளயத்தினால் ஸகல சிருஷ்டிகளும் அழிந்து போகக்கூடிய நிலைமையைக் குறித்து கவலையுற்று அதைத் தவிர்க்கக் கருதி கைலாசநாதனை சிவபெருமானைக் குறித்து துதித்து நிற்க அன்னவரும் பிரும்மதேவனின் வேண்டு கோளுக்கு இணங்கி அவ்வித அழிவை நிவர்த்திக்கும் பொருட்டு சிருஷ்டி பீஜத்தை பிரும்மதேவரிடமளித்து அதை அமிர்தத்துடன் கலந்து பிசைந்து அமிர்தம் நிறைந்த ஒரு குடத் திற்குள் வைத்து குடத்தை தேங்காய், மாவிலை, வில்வம், பூணூல் இவைகளால் அலங்கரித்து மூடி மகாபிரளயத்தில் விட்டுவிடும் படி ஜகதீசன் பிரம்மதேவரிடம் சொன்னார். அவ்வாறே பிரம்ம தேவரும் பிரளய காலத்தில் அந்த அமிர்த குடத்தை மிதக்க விட்டதாகவும் அக்கும்பம் இந்த க்ஷேத்திரத்தின்கண் மிதந்து வந்து தங்கியதாகவும் பிரளயமுடிவில் பிரம்மதேவர் முதலியோர் அக்குடத்தைக்கண்டு களித்து, மறுமுறை சிவபெருமானைத் துதிக்கவும், அவர் அச்சமயம் வேடரூபத்துடன் பிரசன்னமாகி

---

***பிறர் சொத்தே விஷமாகும்***

ஓர் பாணத்தை எய்து அவ்வமிர்த கும்பத்தின் மூக்கை உடைத்தார். அதனுள்ளிருந்த அமிர்தம் இப்பிரதேசத்தில் பரவியது பற்றி இந்த க்ஷேத்திரத்திற்கு ''கும்பகோணம்'' எனப் பெயர் வந்ததென்பது புராண வரலாறு. அக்குடத்தினின்று வெளிப் பட்ட அமிர்தமானது ஒன்று ''மகாமகக் குளம்'' என்றும் க்ஷேமபுஷ்கரணி ''பொற்றமரை'' என்றும் வழங்கப்பெற்று வருகின்றன.

முன் விவரித்தபடி சிவபெருமானல் உடைக்கப்பட்ட குடத்தின் பாகங்கள் அதிலிருந்த அமிர்தத்தைக் கொண்டே பிசையப்பெற்ற ஓர் லிங்க பூர்வமாக பிரதிஷ்டை செய்யப்பட்டு ஈசன் அதனுள் மறைந்து பூஜிக்கப்பட்டதால் அவரே ''கும்பேஶ்வரர்'' என்று வழங்கப்பெற்ருர் என்பர்.

தேவி ஈசனை தர்ஶிக்கத் தேடிவந்தாள். பிரளய மோதலில் 51 மந்திர பீடங்களும் ஈசன் அருகில் வந்து சேர்ந்தன. அம்பாளை அந்த மந்திரபீடத்தில் தம்பக்கத்தில் ஈசன் அமரும்படி ஆக்ஞாபித்தார். நீர் நிறைந்த கிண்டியுடன் மறு படைப்புக்கு ஈசனுக்கு அர்க்கியம் விட பக்கத்தில் அம்பாள் அமர்ந்தாள். உற்சாகமூண்ட பிரம்மதேவன் இங்கு ஸ்ரீ மந்திரபடேசுவரியாகிய மங்களாம்பிகா ஸமேத ஸ்ரீ கும்பேஶ்வரனுக்குக்கோயில் எழுப்பி மாசிமகத்தில் பிரும்மோற்சவம் செய்து மகாமகக் குளத்தில் அவபிருத மங்கள ஸ்நானமும் செய்துவைத்தார்.

அமிர்த குடத்தில் மேல் மூடப்பட்ட அலங்கார வஸ்துக்களான தேங்காய், மாவிலை, பூணூல், வில்வம் முதலியவைகள் முறையே இப்பிரதேசத்தைச் சுற்றிப் பரவி எழுந்து அவைகள் யாவும் ஆங்காங்கே சிவக்ஷேத்திரங்களாக ஏற்பட்டு பூஜார்ஹமாக விளங்கிவருகின்றன.

இந்நகரம் முக்கிய சிவக்ஷேத்திரமாக இருப்பதுமன்றி முக்கிய விஷ்ணு க்ஷேத்திரமாகவும் புண்ணிய தீர்த்தங்களையுடையதாகவும் தொன்றுதொட்டு விளங்கிக் கொண்டாடப் பட்டு வருகிறது.

---

*விஷம் ஒருவரைத்தான் கொல்லும்*

## தீர்த்தத்தின் சிறப்பு

அமுத கும்பத்திலிருந்து சிதறிய அமிர்தமானது இரண்டு இடத்தில தங்கிற்று. அவைதான் மகாமகக் குளமும், பொற்ருமரைக் குளமுமாகவும் விளங்குகின்றன.

கங்கை, யமுனே, கோதாவரி, நருமதை, ஸிந்து, காவேரி, ஸரஸ்வதி, வேகவதி, கிருஷ்ணு முதலிய ஒன்பது புண்ணிய நதிகளும் (சப்த கன்னியர்கள்) பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை (குரு சிம்மராசியிலும், சந்திரன் கும்ப ராசியிலும் வரும்). மாசி மகத்தில் அமுதசரோவரத்தில் (மகாமகக் குளத்தில்) விதிப்படி நீராடி இறைவனே வழிபட்டுத் தங்கள் குறைகளைப் போக்கிக்கொண்டனர். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை ஒன்பது கன்னியர்கள் நீராடுகின்றனர். அங்கு அவர்களது சிலையருகே பெண்கள் மாமாங்கப் பொங்கலிடுவர்.

## மகாமகக் குளத்திலுள்ள தீர்த்தங்கள்.

மகாமகக் குளத்தினுள் நாற்புறங்களிலும் இந்த்ரன், அக்நி யமன், நிருதி, வருணன், தாமிரபரணி, வாயு, குபேரன், ஈசானன், கோதாவரி, காவிரி, பிரமன், யமுனே, சிந்து, நர்மதை முதலான தீர்த்தங்களும் குளத்தின் நடுவில் கன்னி தீர்த்தம் முதலிய அறுபத்தாறு தீர்த்தங்களும் அமைந்து இருக்கின்றன.

இந்த ஆண்டு மகாமக வருஷத்தில் குரு சிம்மராசியில் சஞ்சரிக்கிறது. மகாமக நாளன்று இம்மகாமக தீர்த்தத்தில் மூழ்கினவர் கங்கை முதலிய பல புண்ய தீர்த்தங்களில் மூழ்கின பலனே ஒருங்கே அடைந்து பேறுபெறுவர். இவ்வாறே மகாமகம் வருகிற நாளாகிய ஒவ்வொரு மாசி மகமும் இத்தகைய பெருஞ்சிறப்புள்ளதே. மாசிமாத மகநாளில் இத்தீர்த்தங்களில் நீராடி ஸ்ரீ ஆதிகும்பேசுவரப் பெருமானேத் தரிசித்து நற்பேறு பெறுதல் மனிதப் பிறவி எடுத்ததன் பெரும் பயனுகும். (*தினமணி சுடர்*)

---

**ஸாதுக்களின் பொருளேக் கவர்ந்தால்**

# ஸ்ரீ சிதம்பர க்ஷேத்ர மஹிமா



சிதம்பரம் T. ராமலிங்க தீக்ஷிதர், M. A. M. LITT.
ஸம்ஸ்கிருத விமர்சகர், நெ. 55, கிழவீதி, சிதம்பரம்.

## ஸ்ரீ நடராஜரின் பக்தர்கள்.

व्याघ्रपादप्रभुं वन्दे पतञ्जलिप्रपूजितम् ।

उपमन्योर्गुरुं देवं चिदानन्दनटं विभुम् ॥

சிதம்பரம் கோயில் பல பக்தர்களின் பக்தி வைபவத்தால் சிறந்து விளங்குகின்றது. பக்தர்களுள் சிலர் புராண மாஹாத்மியங்களால் வர்ணிக்கப்பட்டுள்ளனர். மற்றும் பலர் வரலாற்று வாயிலாக அறியப்படுகின்றார்கள். மாஹாத்மியங்களிலிருந்து அறியப்படும் பக்தர்கள்; "வ்யாக்ரபாதர், உபமன்யு, பதஞ்ஜலி, ஜைமினி, ப்ருங்கி முனிவர், இந்திரன், வருணன், புல்கஸன், துர்கடன், துர்மதன், துஸ்ஸஹன்" முதலானவர்கள் இலக்கியத்திலிருந்தும், வரலாற்று நூல்களிலிருந்தும் பிரஸித்தியுள்ள பக்தர்கள். "ஸிம்ஹவர்ம சக்ரவர்த்தி, திருநீலகண்ட நாயனூர், திருமூலர், மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனூர், நந்தனூர், ஸ்ரீ உமாபதி சிவாசாரியார், ஸ்ரீ அப்பய்யதீக்ஷிதர் ஸ்ரீ ராமலிங்கஸ்வாமிகள்; வைஷ்ணவ பக்தர்கள் ; குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார்" முதலானவர்கள். இவர்களுள் முக்யமான சில பக்தர்களின் பெருமையைப்பற்றி ஆராய்வோம்.

---

குடும்பம் ஸந்ததி அழியும்

## வ்யாக்ரபாத முனிவர்.

இவர் மத்யந்தினர் என்ற ரிஷியின் குமாரர் ஆவார். வேதங்களை நன்கு கற்றவர். தந்தையின் ஆசியுடன் தில்லையையடைந்து, ஸ்ரீமூலநாதரைப் பூஜித்து தபஸ் செய்துவந்தார். இவர் மஹிமை மஹா பாரதத்திலும் வர்ணிக்கப்பட்டுள்ளது. இவருக்கு உபமன்யு, தௌம்யர் என்று இரு புதல்வர்கள் இருந்ததாக அறியப்படுகிறது.

महाभारते - अनुशासनपर्वणि - दानधर्मपर्व—अध्या - 14

श्लो. 111—112

पुराकृतयुगे तात ऋषिरासीन्महायशाः ।

व्याघ्रपाद इति ख्यातो वेदवेदान्तपारगः ॥

तस्याहमभवं पुत्रो धौम्यश्चापि ममानुजः ।

இவர் அதிகாலையில் சிவபூஜைக்காக சுலபமாகப் புஷ்பங்கள் பறிப்பதற்காக ஈசனிடமிருந்து புலிக்கால்களையும், கண்களையும், கைகளையும் பெற்றார். அன்று முதல் அவனருளால் - மாத்யந்தினர் "வ்யாக்ரபாதர்" என்ற புகழ்ப்பெயர் பெற்றார். இந்த க்ஷேத்ரம் வியாக்ரபுரம் (புலியூர்) எனப்பட்டது. பிறகு ஈசனின் ஆனந்த தாண்டவம் காண்பதற்காக வ்யாக்ரபாதர் ஓர் ஆச்ரமமமைத்து ஆத்மார்த்த பூஜைக்காக சிவலிங்கம் ஸ்தாபித்து பூஜைசெய்து வந்தார். அதுபோலவே தந்தையான மத்யந்தின முனிவரும் சிவபூஜை செய்துவந்தார். இந்த இரண்டு ஆத்மார்த்த லிங்கங்களும் தில்லைக்கு மேற்கே இளமையாக்கினார் கோயிலில் "மத்யந்தினேச்வரர்" என்றும் "மாத்யந்தினேச்வரர்" என்றும் இன்றும் விளங்குகின்றன.

---

இக்கோயிலின் எதிரில் வ்யாக்ரபாதரின் மஹிமையைப் போதிக்கும் புண்ய தீர்த்தங்களாக "வ்யாக்ரபாத தீர்த்தம்," "வ்யாக்ர ஹ்ரதம் (புலிமடு)" உள்ளன. இவை சிதம்பர க்ஷேத்ரத்தின் பத்து புண்யதீர்த்தங்களைச் சேர்ந்தவையாகும்.

### உபமன்யு முனிவர்.

வ்யாக்ரபாதர், வஸிஷ்ட ரிஷியின் ஸஹோதரியான ஸதீ என்பவளை மணந்து, சிவானுக்ரஹத்தால் உபமன்யு என்ற தவப்புதல்வரைப் பெற்றார். அங்கு உபமன்யு தேவப்பசுவான காமதேனுவின் பாலில் நன்கு வளர்ந்து வந்தார். பிறகு தாயுடன் தில்லைவனம் வந்து தந்தை இல்லம் வந்தடைந்ததும் உபமன்யு குழந்தை காமதேனுவின் பாலை நினைத்து கத்தவே, ஸ்ரீமூலநாதரிடம் வ்யாக்ரபாதர் பிரார்த்திக்கலானார். ஸர்வேஶ்வரன் பக்தனிடம் கருணைகூர்ந்து அங்கு உபமன்யுவின் பொருட்டு பாற்கடலையே அருளினார். ஈசன் அருள்பெற்று உபமன்யு வேதத்திலும், ஆகமத்திலும் தேர்ச்சியுற்று சிறந்த சிவபக்தரானார். இந்தப் பாற்கடல் இன்றும் தில்லையின் வடக்கு எல்லையிலுள்ள 'தில்லைக்காளி' கோயிலுக்குத் தென் கிழக்கே அமைந்துள்ள புண்ய தீர்த்தமாகும். இதுவும் தச தீர்த்தங்களுள் ஒன்றாகும்.

स्कान्दे—

"क्षीरार्थिने ददौ तस्मै क्षीरसागरमीश्वरः।
सर्ववेदान्तविज्ञानं पुराणानान्तथैव च॥
शास्त्राणामपि सर्वेषां तव तत्वं स्फुरत्वलम्।
अविनश्वरता भूयात्तव तापसपुत्रक॥

इति दत्वा वरानन्यान्नीश्वरोऽन्तरधात्क्षणात् ।
लब्ध्वा वरं तथा शंभोरुपमन्युःशिवप्रियः ॥ "

नीलकण्ठदीक्षितस्य शिवोत्कर्षमञ्जर्याम्—श्लो—50

" पारम्ये निगमागमाः परमसौलभ्ये पिशाचादयो
वांछाधीनपदार्पणे स भगवान्वैयाघ्रपादो मुनिः ।
सर्वांगः सहनेऽन्धकश्च दनुजो यस्य स्थिताः साक्षिणः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते ॥

சேக்கிழாரின் பெரிய புராணம்.

" இன்னதன்மைய னென்றறியாச் சிவன்
தன்னையே உணர்ந்து ஆர்வம் தழைக்கின்ருன்
உன்னருஞ்சீர் உபமன்னிய முனி "

ஸ்ரீ கிருஷ்ண பகவான் தில்லை வந்து உபமன்யுவிடம் சிவதீக்ஷைப் பெற்று சிவமஹிமை கற்றுணர்ந்தார் என்றும் அறியப்படுகிறது. மேலும் "சிவபக்த விலாஸம்" என்ற 63 நாயன்மார்களின் சரித்திரமும் இவரால் எழுதப்பட்டது என்றும் அறிகின்ருேம்.

## ஸ்ரீ பதஞ்ஜலி பகவான்

சிதம்பர க்ஷேத்ரத்தில் ஈசனின் ஆனந்த தாண்டவத்திற்கு ப்ரதான காரண பூதர்களாக உள்ளவர்கள்

பதஞ்ஜலியும், வியாக்ர பாதரும் ஆவார். ஒரு ஸமயம் ஆதிசேஷன் எஜமானனான ஸ்ரீ மஹாவிஷ்ணுவினிடம் பரமேச்வரனின் ஆனந்தாண்டவ வைபவத்தை அறிந்து, தானும் காண ஆவல்கொண்டு, விஷ்ணுவின் அனுமதி பெற்றுகைலாஸம்வந்து சிவனைக்குறித்து தபஸ்புரிந்தார். ஸர்வேஶ்வரன் சந்தோஷமடைந்து ஆதிசேஷனை பதஞ்ஜலியாக அவதரித்து பூலோக கைலாஸமான தில்லையில் தபஸ் செய்யும்படியும் வ்யாக்ரபாதருக்கும், பதஞ்ஜலிக்கும் உரிய காலத்தில் ஆனந்ததாண்டவம் காட்சியளிப்பதாகவும் கூறினர். ஆதிசேஷரும் தில்லை வந்து ரிஷி தம்பதிகளான அத்ரி அனஸூயைக்குப் புதல்வராக "பதஞ்ஜலி" என்ற நாமதேயத்துடன் அவதரித்து, வ்யாக்ரபாத முனிவருடன் நட்புகொண்டு, அவரைப் போலவே தனியாக ஆத்மார்த்த லிங்கம் ஸ்தாபித்து பூஜை செய்துகொண்டு, ஸ்ரீமூலநாதரையும் வழிபட்டு வந்து தாண்டவத்தின் பொருட்டு தவம் புரிந்துவந்தார், இவர் ஸ்தாபித்தலிங்கம் "அனந்தீச்வரர்" ஸ்ரீ நடராஜர் கோயிலுக்கு மேற்கே உள்ள அனந்தீச்வரன்கோயிலில் உள்ளது. இதன் எதிரில் உள்ள புண்யதீர்த்தமே "நாகதீர்த்தம்" எனப்படும். இது தசதீர்த்தங்களுள் ஒன்றாகும். கை அஞ்சலியிலிருந்து உண்டானதால் பதஞ்ஜலி எனப்பட்டார்.

नटेशविजयकाव्ये—सर्ग—३—श्लो—66

" अत्रेः पुरा त्वमभवस्तनयोऽनसूया

त्वामञ्जलौ धृतमवेक्ष्य भुजङ्गरूपम् ।

त्रासादपातयदतोऽजनि ते पतञ्ज-

ल्याख्याधुनापि भव तादृश नामरूपः ॥ "

---

பகவான் பதஞ்ஜலி வ்யாகரண மஹாபாஷ்யம், வைத்ய ஸூத்ரம், வார்த்திகம், யோகஸூத்ரம், ஸ்ரீ சிதம் பரேச்வரரின் நித்யபூஜாவிதானஸூத்ரம் (பூஜாபாதஞ் ஜலம்) முதலிய அரிய நூல்கள் இயற்றியுள்ளார்.

रामभद्रदीक्षितेन्द्रस्य पतञ्जलिचरितकाव्ये-सर्ग-२-श्लो-25

"सूत्राणि योगशास्त्रे वैद्यकशास्त्रे च वार्तिकानि ततः ।
कृत्वा पतञ्जलिमुनिः प्रचारयामास जगदिदं त्रातुम् ॥"

ஸ்ரீநடராஜரின் பக்தர்களுள் சிறந்தவர் பதஞ்ஜலி பக வான். பதஞ்ஜலி, வ்யாக்ரபாதர் இருவரும் இங்கு ஆனந்த தாண்டவம் காண தபஸ் செய்துவந்தனர். ஈசனும் பக்தர் களிடம் ப்ரேமை கொண்டு, தைமீ குரு புஷ்யதினத்தில் தில்லையில் சித்ஸபையில் ஆனந்ததாண்டவம் புரிந்தார். பிறகு பதஞ்ஜலி, வ்யாக்ரபாதர்களின் பிரார்த்தனைக் கிணங்கிஇன்றும், அனுதியாக ஸர்வேஶ்வரரான ஸ்ரீஆனந்த நடராஜராஜர் ஆனந்ததாணடவம் செய்து கொண்டு நம்மையெல்லாம் அருள்பாலித்து வருகின்றார்.

பதஞ்சலி சித்ஸபேசனிடம் வ்யாகரண மஹாபாஷ்ய மியற்றும் சக்தியையும், தாண்டவம் காணும் வாய்ப்பை யும் இருவரங்களாக வேண்டியதாக ராமபத்ர தீக்ஷிதர் தனது "பதஞ்ஜலி சரித காவ்யத்தில்" வர்ணிக்கின்றார். ஈசனருள் பெற்று பதஞ்ஜலி பகவான் ஆனந்ததாண்டவப் பேறு பெற்று, வ்யாகரண மஹாபாஷ்யமியற்றி அழியாப்புகழ் பெற்றார்.

---

यथा पतञ्जलिचरिते-सर्ग- 26. 27; அ. 8—75

चरितं निजमादितः स्मरन्नथ शेषेति निमन्त्रितो मुनिः
पदवार्तिकभाष्यनिर्मितौ प्रथमं पाटवमभ्ययाचत ।
अथ तस्य जगत्त्रयप्रभोर्नटनालोकनयोग्यतां पुनः
मुनिमर्थयमानमात्मनः स तथास्त्वित्यवदन्मुदा मृडः ॥

किंच

"नृत्तं तत्फणिपतये स दर्शयित्वा
प्राहेदं प्रणयकिरा गिरा गिरीशः ।
त्वं कृत्वा भुवि पदशास्त्रवार्तिकानां
भाष्यं तद्विवृणु ततो दिवं व्रजेति ॥"

---

× × × × × × × ×× × × × × × × ×

ஹாஸ்யம்.

### இது எனக்கு! முன்னது வண்டிக்கு!!

ஸபையில் கதைக்காக ஜனங்கள் கூடி வெகுநேரமாக காத்துக்கொண்டிருந்தனர். நாழிகழித்து வந்தார் பாகவதர். ஒரே கரகோஷம் வானைப் பிளந்தது. மேலே கதை ஆரம்பித்து அழகாக பாடினார் பாகவதர்.

இந்த கரகோஷம் எனக்கு. முன் நடந்தது தாமதமாக வந்த வண்டிக்காரனைச் சார்ந்தது என்றார் பாகவதர்.

மறுபடியும் பலத்த கரகோஷம். இது என்சொல்லுக்கென்றார்.

---

அருணோதய காலத்தில் தூங்காதே

## நூல் விமர்சனம்.

ஸம்ஸ்கிருதம் : ஸம்ஸ்கிருத தீபிகா முதல் பாகம் 126 பக்கம் விலை ரூ. 1—50. (2) ஷை இரண்டாம் பாகம் 180 பக்கம் விலை ரூ. 2—40. (3) ஸூத்த ரூபாவளி 70 பக்கம் விலை 80 பைசா. (4) ஸாஹித்ய ஸுதாகர 80 பக்கம் விலை ரூ. 1 — 00. ஆசிரியர் பண்டித பரமேஸ்வர சாஸ்திரி. கிடைக்குமிடம், மங்களோதயம் லிமிடெட், திருச்சூர் 1, கேரளா.

இந்நூல்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் நுழைவோருக்கு ப்ரகாசமளிக்கும் தீபமே. வ்யாகரணம் இக்காலத்தவரால் ஒதுக்கப்படுகிறது. ஸங்கீதத்திற்கு ஸ்ருதி லயம் போல் வியாகரணமும் அலங்காரமாகும். நமது சந்தாதாரர் முத்தமிழிலேயே எல்லாவற்றையும் கேட்கின்றனர். 4 புருஷார்த்தம், 4 வேதம் போலும், ஸம்ஸ்கிருத விருப்பமுள்ளோருக்கு இவை என்பது நமது அபிப்ராயம். ஆசிரியர் முயற்சி மிக மிக சிலாக்யமானது.

### ஸ்ரீ பூர்ணானந்த நாத ஸ்ரீ வித்யா பூஜா மஹோத்ஸவ வெளியீடு.

75 பக்கங்கள் கொண்ட இந்த அரிய மலர் 59, தம்புசெட்டித்தெரு, சென்னை-1, என்ற விலாஸத்தில்தான் கிடைக்கும். பல தேவதா மந்த்ரங்களும், பலகவசங்களும் அரிய கட்டுரைகளும், பற்பல தேவீ படங்களும் கண்களையும் மனதையும் ஒருமிக்க கவருகின்றன. விலை மதிக்க முடியாத இதற்கு விலை வைக்காதது நியாயமே! ஆனால் ஷை பீடத்தின் பூஜைக்கும் தபால் செலவிற்கும் காணிக்கை அனுப்பி இலவசமாகப் பெறலாம்.

பாவை மலர் :— திருப்பாவை — திருவெம்பாவை, மத்திய குழு, 19, பெரிய கடைத்தெரு, மாயூரம். சென்ற வருடம் நடைபெற்ற மகாநாட்டின் விவரங்களை விழா படங்களுடனும் ஸ்ரீ ஜகத்குரு பரமாசாரியாளின் உபதேச மொழிகளுடனும் 62 பக்கங்களில் வெளியிட்டிருக்கின்றனர்.

---

**பகலில் தூங்காதே**

# ஸ்ரீ சாந்தாநந்த ஸ்வாமிகள்.

## புதுக்கோட்டை புவனேச்வரி பீடம்.



இறைவனது திருவுள்ளத்தை எவரும் அறியார். சப்பாத்தியைப்படைக்கிறார்! சந்தனமரத்தைப்படைக்கிறார்! நாஸ்திகரைப்படைக்கிறார்! ஆஸ்திகரைப்படைக்கிறார்! கர்மடனைப் படைக்கிறார்! ஞானியைப் படைக்கிறார்! ஶிஷ்டனைப் படைக்கிறார்! துஷ்டனைப் படைக்கிறார்!



ஸ்ரீ சாந்தா நந்த ஸ்வாமிகள்.

நம் அறிவிற்கு அப்பாற்பட்டது அவன் செயல். அவன் கருத்தை அறிந்த ரிஷிகள் வர்ணாஶ்ரம தர்மத்தை வகுத்துக் காட்டி இருக்கிறார்கள். நான்கு ஆஶ்ரமங்களுக்கு மேற்பட்டது அவதூதாஶ்ரமம். அதற்கு முதல் ஆஶ்ரயமாக இருந்தவர் தத்தாத்திரேயர். அவர் ஶிஷ்ய பரம் பரையைச் சேர்ந்தவர் அவதூத ஆஶ்ரமிகள். அவதூதரெனில் அனைத்தையும் உதறித்தள்ளியவர் என்று பொருள். இன்ப துன்பங்களையும் காமக்ரோதங்களையும் மான அவமானங்களையும் உதறித்தள்ளியவர். மற்ற ஆஶ்ரமிகளுக்கு உள்ளது போன்ற யாதொரு கர்மாவும் இவர்களுக்கு இல்லை. வஸ்த்ரத்தை மாத்திரமல்ல!

---

ஸ்நாநம் செய்யாமல் சாப்பிடாதே

வாசனைகளையும் மான அவமானத்தையும் துறந்தவர் அவதூதர் !

அத்தகைய மஹனீயர்களை ஹ்ரிஷீகேசத்திற்கு அருகிலுள்ள கீதா மடத்தினருகே காணலாம். பனியிலும், மழையிலும், வெய்யிலிலும் உடலை மூடிக்கொள்ளார்கள். உலக வாசனையைத் துறந்தவர்கள். ஆதலால் வஸ்த்ரமும், கௌபீனமும் கூட தரிப்பதில்லை. அவர்கள் கண்ணில் ப்ரும்ம ஸ்வரூபத்தைத் தவிர வேறு ஒன்றும் படுவது இல்லை. நான், அவன் நல்லது கெட்டது, இன்பம், துன்பம், மான அவமானம், ஆண் பெண் முதலியவைகளை உதறித் தள்ளியவர்கள் அவதூதர் எனப்படுவர். இவ்வாச்ரமத்திற்கு ஆதி குரு தத்தாத்திரேயரே ஆவர். வட நாட்டில் அத்தகைய அவதூத ஆய்ரமிகளைக் காணலாம். தென்னாட்டில் காண்பது அரிது. தென்னாட்டில் அத்தகைய சம்பிரதாயத்தை கைக் கொண்டவர் [நமது ஆசிரியருக்கு பூர்வாய்ரம பந்துவான] சேந்தமங்கலம், அவதூதாய்ரமிகள் ஆவார்.

அவர்களது சிஷ்யர்களில் முதல்வரே நமது ஸ்ரீ சாந்தாநந்த ஸ்வாமிகள். பெயருக்கேற்ற வண்ணம் அவரது முகத்தில் சாந்தி ரசம் தாண்டவமாடக் காணலாம். நவநாகரீகம் தாண்டவமாடும் இக் காலத்தில் வஸ்திரத்தையும் உதறித் தள்ளி ஸஞ்சாரம் செய்த ஸ்ரீ சேந்தமங்கலம் அவதூத ஸ்வாமிகளை சுமார் 60 ஆண்டுகளுக்கு முன் தரிசிக்கும் பாக்யம் பெற்றவர் அவரது பூர்வாச்ரம பந்துவான நமது ஆசிரியர்.

இம்மாத அட்டைப்படத்தை அலங்கரிக்கும் ஸ்ரீ சாந்தாநந்த ஸ்வாமிகளின் அருமை பெருமைகளையும் அரிய செயல்களையும் தவ வலிமையையும் கூறச்சொற்களில்லை. நமக்கு ஆற்றலுமில்லை. அத்தகைய அவதூதரை அன்னை புவனேய்வரி ஆட்கொண்டு நம்மிடையே நடமாடும்படி

செய்திருக்கிருள். இல்லையேல் இமயமலையில் அவதூத ராக சஞ்சரித்துக்கொண்டிருப்பார். அன்னை புவனேஸ்வரி அவர் மூலமாக தென்னுட்டிற்கு அருள்புரிகிருள்.

மதுரை மாநகரில் இவ் உத்தமரைப்பெற்று எடுக்கும் பாக்யம் ஸ்ரீ ராமசாமிக்கும், யோகாம்பாளுக்குமே கிடைத்தது. பெற்ருேருக்கு பதின்மூன்ருவது குழந்தையாக தோன்றிய குழந்தைக்கே தலையில் ஜடைதோன்றியது. பின்னர் இவர் ஜடாதாரி ஆவார் எனக்காட்டியதுபோலும். இவரது பூர்வாஸ்ரமப் பெயர் (ஞான பண்டித ஸ்வாமீ யாகத் தோன்றிய) பால சுப்ரமண்யன். இளமையிலே பெற்ருேரை இழந்த இவருக்கு ஸகோதரியே ஊன்று கோலாக இருந்தாள். ஞானப்பால் பெருகும் இவரது முகம் ஞானப்பாலைப் பருகிய ஞானசம்பந்த மூர்த்தியை ஒத்திருக்கின்றது. தேசத்தொண்டிலும், பஜனையிலும் ஈடுபட்ட இவரை குடும்ப வாழ்க்கையில் ஈடுபடுத்த உறவி னர் பெரும்பாடு பட்டனர். மணத்தில் மநமில்லா இவரை மணம் புரிவிக்க, இல்லறத்தில் ஈடுபடுத்த உறவினர் செய்த முயற்சி விழலுக்கு இரைத்த நீர் ஆயிற்று. க்ஞாந குருவைத்தேடி இமயமலைச் சென்று, பல துறவிகளைப் பணிந்தார். பத்ரிகாஸ்ரமம் சென்று, ரிஷீகேஸம் சென்ருர். பல அவதூதர்களை தரிசித்து. சிவானந்தரையும்சந்தித்தார்.

அங்கேயே தங்க நினைத்த இவருக்கு சேந்தமங்கலத் தில் உள்ள சுயம்பிரகாசர் ஸ்வாமிகளே குரு என அங்கு அனுப்பிவிட்டார், சிவானந்த சுவாமிகள் க்ஞான குரு வான ஸ்ரீஸ்வயம் ப்ரகாச ப்ரும்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமி களை நாடி ஓடி வந்தார்.

### அவதூதாஸ்ரமம்.

ப்ரும்மசாரி, க்ருஹஸ்த, வானப்ரஸ்த ஸன்யாஸ ஆகிய நான்கு ஆஸ்ரமங்களை விட இது வேருனது. இந்த வ்ரதத்தை மேற்கொள்ளுவது மிகமிகக்கடினம். இல்லறம்,

---

பொருள், உடலாசை, இவைகளை எல்லாம் உதறித் தள்ளுவதுடன் உலக வாசனையையும் வஸ்த்ரங்களையும் உதறித்தள்ளி தாய் வயிற்றிலிருந்து வெளி வந்தபோது உள்ளபடியே இருத்தல் வேண்டும். பரமசிவன் தத்தாத்ரேயர் இவர்களைபோல் திக்குகளையே அம்பரமாக (வஸ்த்ரமாக) கொள்ளவேண்டும்.

அத்தகைய அவதூதர் நாட்டில் நடமாடாமல், காட்டிலே இமயமலைச் சாரலிலே வசிப்பார்கள். கானலோ, மழையோ, பனியோ, குளிரோ இவர்களிடம் அண்டாது. அத்தகைய அவதூதர்கள் ஹ்ருஷீகேஶ கங்கையின் அக்கரையிலுள்ள தர்ம சாலைக்கு, பகல் பன்னிரெண்டு மணிக்கு வருவார்கள். கையையே பாத்திரமாகக் கொண்டு (கரபாத்திரி) அங்கு கொடுக்கும் உணவை அருந்தி கங்கையில் தாகசாந்தி செய்து கொண்டு போவார்கள். எங்கிருந்து வருகிறார்கள்? எங்கே தங்குகிறார்கள்? எங்கே செல்கிறார்கள்? என அறிய முடியாது. இத்தகைய பல அவதூதர்களை தரிசிக்கும் பாக்யம் பெற்றவர் நமதாசிரியர்.

உடலில் எவ்விதமான மறைவும் இல்லாமல் ஸஞ்சாரம் செய்யும் அவதூதர்களுக்கு அந்நியர், ஆண், பெண், வெட்கம் முதலிய ஒன்றும் தோன்றாது. பொது மக்களிடையே அத்தகையோர் ஸஞ்சரிப்பது குற்றமென அதிகாரிகள் சிறைப்படுத்துவர். அதனால் சிறைக்கு பயந்தல்ல, சமூக ஒழுக்கத்தை நாடி பொது ஜனங்கள் இடையே வரும்பொழுது சிலர், மேலே ஒரு காவி வஸ்த்ரத்தை போர்த்துக் கொண்டு வருவர்.

குரு நமது கதா புருஷருக்கு அத்தகைய ஆஶ்ரமத்தைக் கொடுத்து தபோ வனங்களில் சென்று ஞானப்யாசம் செய்யும்படி, சாந்தானந்தர் என்ற பெயரையும் அளித்து அனுப்பினார். கடுமையான ப்ரம்மசர்யம் மௌனம் இவைகளைத் துணையாகக்கொண்டு காடு, மலை,

நாடு, நகரம் முதலிய இடங்களில் சஞ்சரித்தார். காஞ்சியி லுள்ள காமாக்ஷி அம்மன் கோவில் காயத்ரீ மண்டபத்தில் ஓராண்டு தங்கி தவம் செய்து அன்னையின் அருளைப் பெற்றார். பழனி ஆண்டவன் ஐயப்பன் முதலியவர் களின் அருகிலுள்ள காடெல்லாம் திரிந்து கடுந்தவம் புரிந்து இடையிடையே குருவை தரிசித்து ஏழு ஆண்டு களில் ஞான நிஷ்டை பெற்றார்.

## அவதூதர்களுக்கு ஆலய அமைப்பு அவசியமா ?

துறவிகளுக்கு ஆலயம் அமைத்தல் கும்பாபிஷேகம் செய்தல், கோடி அர்ச்சனை நடத்துதல், ஹோமம் செய் வித்தல் இவைகள் யதி தர்மமா? அவசியமா? என்று சிலர் ஐயம் கொள்வர். கேட்கவும் கேட்பர். முதலில் அதைப்பற்றி விசாரிக்க நாம் அருகரா? என்று கவனிக்க வேண்டும். இறைவன் ஒரு சில க்ஞானிகளை அவர் ஆத் மானந்தம் அடைவது மட்டிலும் போதாது உலகத்தவரது நன்மைக்கும் உழைக்கவேண்டும் என தூண்டுகிறார்.

## ஆதிகாரிக புருஷர்கள்.

அதாவது இறைவன் தனது அதிகாரத்தை அவர் களுக்கு அளித்து லோக நன்மை செய்யச்சொல்லுகிறார். ஆதி சங்கரர் வியாசர் வித்யாரண்யர் இத்தகையோர் ஆத்ம நிஷ்டையில் அமர்ந்திருந்தால் பாரத புண்ய பூமி யும் மற்ற நாடுகளைப் போல் லோகாயதிகர் இடமாகி யிருக்கும் அல்லவா ?

ஜகஜ்ஜனனியான அன்னை இவரை ஆட்கொண்டு. நமக்காக புவனேஶ்வரீ பீடம் பரம குரு அதிஷ்டானம் கணபதி ஹோமம், சண்டீ ஹோமம், லக்ஷ நவக்ரஹ ஹோமம், ஸ்ரீ ஸூக்த ஹோமம், கோடி புவனேஶ்வரீ ஹோமம், கோடி அர்ச்சனை முதலியவைகளை நடத்திவைத் தார். பரம குருவின் அதிஷ்டானத்தையும் பல

---

சந்நிதிகளையும் அழகாக அமைத்து அங்கு நித்ய நைமித்திக பூஜைகள் நன்கு நடக்கும்படி அருள்புரிகிருர்.

### ஸ்ரீ சாந்தா நந்தரின் சிறப்பான குணங்கள்.

சுந்திரமெனில் அழகெனப் பொருள். அன்னை தேவீ திரிபுரஸுந்தரி. அவளது அருளைப் பெற்றே மஹா விஷ்ணு அழகாக இருப்பதுடன் மோகினியாகவும் தோன்றினர். அந்த அன்னை இந்த அவதூதரிடம் அளித்த அருள் (அழகு) கருணையாகவும் ப்ரும்ம வர்சஸாகவும் இவரது முகத்தில் பெருகி ஓடி ப்ரகாசிக்கின்றது. அன்னையின் அருளால் தந்த்ர சாஸ்திரம் முதல் வேதாந்த சாஸ்திரம் வரை ஸகல கலைகளிலும் கரை கண்டார். பல ஸித்திகளைப்பெற்ருர்.

துறவிகளுக்கு விதி நிஷேதம் கிடையாது. ஆதலால் சிலர் வேத சாஸ்திர ஸம்ப்ரதாய சதாசாரங்களுக்கு புறம்பான சிலகாரியங்களைச் செய்வர். ஸ்ரீ சாந்தானந்தர் நடத்திய கோடி ஹோம யாகத்தில் கைக்கொண்ட ஸதாசாரத்தை தேவர்களும் ரிஷிகளும் கோலாகல குதூகலமாக கொண்டாடுவர். புன்னகை பூத்த முகம்! தேன் சொரியும் சொற்கள்! அருளை அள்ளி அளிக்கும் கடாக்ஷம்! அசஞ்சலமான அன்னை பக்தி! ஒப்பு உயர்வற்ற ஞானம்! தேவியின் ஸாரூப்யம் போன்ற திருமேனி !!

ஜீவன் முக்தர்கள் முன் வாசனையாலும் இறைவன் தூண்டுதலாலும் செய்யும் கர்மாக்களின் புண்ய பாப பலன் அவர்களிடம் செல்லுவதில்லை. ஆனல் அவை பலனைக் கொடுக்காமல் போவதுமில்லை ! அத்தகையோரை இகழ்வோர் அவர்களிடம் ஏதேனும் பாபம் இருந்தால் அதைப் பெறுவதுடன் இகழ்ந்ததற்காக தனி பாபத்தையும் பெற்று பலனை அனுபவிப்பர். புண்ய சீலரை ஜீவன் முக்தரைப்போற்றிப்புகழ்ந்து அவருக்குத்தொண்டு செய்பவர் அவரது புண்ய மெல்லாவற்றையும் பெறுவர்.



---

**அது நம் தேவ நிந்தையே ஆகும்**

# தை மாஸ விசேஷங்கள்.

பிலவங்க உத்தராயண ஹேமந்த மகரம்—தைமீ.

1௳ திங்கள்: பௌர்ணமி, புனர்வஸு உத்தராயண புண்யகாலம், பொங்கல் பண்டிகை

2௳ செவ்வாய்: கோபூஜை, தை பூசம், கரிநாள்.

6௳ சனி: தியாகராஜ ஆராதனை.

11௳ வியாழன்: ஸ்மார்த்த ஏகாதசி. (12௳ வைஷ்ணவ ஏகாதசி). 27௳ சனி: ஸர்வ ஏகாதசி.

15௳ திங்கள்: அமாவாஸ்யா, உத்ராடம் 12-மணி வரை (பிரதக்ஷிண அமாவாஸ்யை).

22௳ திங்கள்: ரதஸப்தமி வைவஸ்வத மந்வந்தர தர்ப்பணம். எருக்க இலை ஸ்நானம்.

23௳ செவ்வாய்: பீஷ்ம தர்ப்பணம்.

24௳ புதன்: கிருத்திகை (சுபமுகூர்த்தநாள் 4௳, 26௳

(அச்வத்த ப்ரதக்ஷிணம்; தபால் சார்ஜுடன் 58 பை. சங்கராந்தி கோபூஜை 45 பை. எருக்க இலை ஸ்நான ச்லோகாதி பல விஷய நூல் 42 பை. மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.)

## தை பிறந்தால் வழி பிறக்கும் (திறக்கும்)

அரிய பழமொழி! இதை உத்தராயணத்தில் விவாஹாதிகள் செய்வோர் விவாஹத்திற்கு வழிபிறக்குமென்ற பொருளில் கூறுவர். விவாஹத்திற்கு மாத்திரமல்ல. உடலை விடுபவருக்கும் மிகப் பொருத்தமானது! வைகுண்ட ஏகாதசிக்கடுத்த நாள் வைகுண்ட (ஸ்வர்க்க) வாசற்படியின் வழி திறக்கும். அதுவரை கதவு மூடப்பட்டிருக்குமென கருத்தல்ல. சுப கார்யங்களுக்கும் உடல்

சென்றபின் நற்கதி பெறுவதற்கும் ஏற்ற காலம் தை முதல் ஆனி முடிவுவரையான ஷண்மாஸா உத்தராயணம்.

ஈ, எறும்பு கொசுபோல் இறந்து இறந்து பிறப்பர் மஹா பாபிகள். புண்யமும், பாபமும் ஸமமாக உள்ளவர்கள் தக்ஷிணாயனமார்க்கமாக ஸ்வர்க்கம் சென்று புண்ய மானபின் பூமியில் பிறப்பர். மஹாதானம், மஹாபுண்யம் உபாஸனம் செய்வோர் உத்தராயணத்தில் இறந்து தேவ மார்க்கமாக பிரும்மலோகம் செல்வர். இதனுல்தான் உத்தராயண மரணம் விசேஷமென்பர்.

அடிபட்டு விழ்ந்த பீஷ்மர் சரதல்பத்தில் இருந்தே உடலை விட உத்தராயணத்தை வேண்டி நின்ருர்.

தக்ஷிணாயனம் கிருஷ்ணபக்ஷம் இரவுநேரமிறந்தோருக்கு ஸம்ஸ்காரம் செய்யும்பொழுது, அந்தக் காலத்தில் இறந்தால் பிராயஶ்சித்தம் செய்வர். செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு என்பது புண்யஶீலனுக வாழ்ந்தானு! ஆனுல், உத்தராயணத்தில் இறப்பான் என்பதையே விளக்கும்.

× × × × × × × ×× × × × × × × ×

## தார்மிகச் செய்தி.

ஸ்ரீ வைத்யஸுப்ரமண்ய அய்யரவர்கள் அமைத்த ஜகத்குரு ஸ்ரீ ப்ரவசன மந்திரத்தில் நித்யம் ரிக் யஜுஸ் ஸாமவேத பாராயணம் நடப்பதுடன், ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகளது பாரத காலக்ஷேபமும் நன்கு நடக்கிறது. பல்லாயிரக்கணக்கான மக்கள் கேட்டு ஆனந்திக்கின்றனர்.

ஸ்ரீ சாரதாம்பாள் ப்ரதிஷ்டையும் நடக்கப்போகிறது, 'ஸ்வாத்யாய ப்ரவசநம் தவஜாநே' என்ற உபதேசத்தை சரிவர அனுஷ்டிக்கிறது மந்திரம்.

---

**ஏகாதசியில் தாம்பூலம் போடாதே**

# சாஸ்த்ர வழி சுகவழி.



வைத்ய. S. V. ராதாகிருஷ்ணசாஸ்திரி. திருச்சி.

[ நமது பிரார்த்தனைக் கிணங்கி 'ஆரோக்யம்' ஆசிரியரும் ஆயுர்வேத சிரோமணி பிரும்மஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் அரிய அமிருதத்தை நமக்களிக்கிறார்கள். நமது நன்றி ]

சாஸ்த்ராய ச ஸுகாய ச என்று ஒரு பழமொழி உண்டு. கையாள்வதற்கு எளிதாகவும் அதே சமயத்தில் சாஸ்திரம் ஆசாரம் முதலியவைகளுக்கு உட்பட்டுமிருப் பதை இவ்விதம் குறிப்பிடுவர். நல்லோர்கள், உணவு உடை லோகவியவஹாரம், ஆத்ம விசாரம் முதலிய தமது அன்றாடத் தேவைகள் விஷயத்தில் இப்படி சாஸ்திரங்களுக்கு ஒத்தும் நடை முறையில் சுகமாக இருக்கும்படியுமான முறைகளையே வைத்துக்கொள்வார் கள். தர்மம் அர்த்தம் காமம் என்ற மூன்று புருஷார்த் தங்களும் மனித வாழ்க்கையில் இன்றியமையாதவை. இவை ஒன்றுக்கொன்று முரண்படாதபடி வாழ்க்கையை அமைத்துக் கொள்வது தான் சிறந்தது. எங்கேனும் என் றேனும் இம் மூன்றையும் கையாளும்போது முரண்பாடு கண்டால் அங்கு தர்மத்திற்கு பங்கம் ஏற்படாதவாறு அமைத்துக்கொள்ளுதல் வேண்டு மென்பதே இதில் கவனத்திற்கு உகந்தது. வாழ்க்கை முறையை சாஸ்த்ரங் கள் குறிப்பிட்ட வழியில் அமைத்துக் கொள்பவர் களுக்கு இந்த முரண்பாடு என்றும் ஏற்படாது. பல யுகக்கணக்கான காலத்தில் முக்காலமும் அறிந்தவர்களும் எல்லா பிராணி வர்க்கத்திடம் பரிவுள்ளவர்களும் தன்னல நோக்கற்றவர்களுமான பெரியோர்கள் தாம் ஆண்டு அனுபவித்து நல்லதெனக் கண்டவைகளையே சாஸ்த்ரங் களாக அமைத்துள்ளார்கள். அங்கு சுய நலத்திற்கோ ஏற்றத்தாழ்வு மனப்பான்மைக்கோ இடமில்லாததால்

---

விளையாட்டாக கூட மிரட்டாதே

அவைகளில் கூறப்பட்டுள்ளவை என்றுமே நன்மை பயக்கும் என்பதில் ஐயமில்லை.

சாஸ்த்ரங்கள் என்றால் அரச கட்டளையைப் போல நமது பகுத்தறிவிற்கு இடம் கொடாமல் அப்படியே ஏற்றுக்கொள்ளத்தக்கவை என்று கூறுவது உண்டு. ஆகவே சாஸ்த்ரங்களின் வழியே நடப்பது மூடநம்பிக்கையின் அடிப்படையிலாகும் என்று எண்ணுவது தவறு. அறிவின் வளர்ச்சியோ மூதிர்ச்சியோ ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு நிலையுள்ளது. பகுத்தறிவால் எடைபோடும் எண்ணமோ எல்லோருக்கும் ஏற்படலாம். மிகக்குறுகிய எல்லையில் அடங்க கூடிய பகுத்தறிவுள்ளவனுக்கு சில விஷயங்கள் விளங்காதிருக்கலாம். எல்லோரும் எப்போதும் எதையும் பகுத்தறிவால் அறிந்துக்கொள்ள முடியும் என எண்ணமுடியாது. மிகச்சிறந்த பகுத்தறிவாளனுக்கு கூட சில விஷயங்கள் காலதேச வர்த்தமானங்களின் குறுக்கீட்டால் புரியாமல் போகலாம். சிறந்த விஞ்ஞான மேதைகள் பலகால ஆராய்ச்சிக்குப் பின் இதுதான் முடிவெனக்கண்டதாக நேற்றுவரை ஒப்புக்கொண்டுள்ள விஷயங்களின் இன்று விஞ்ஞான ஆராய்ச்சியின் அடிப்படையில் முடிவுவேறுவிதமாக மாறிவிட்டதென அறிக்கைகள் வெளியாவதைக் காண்கிறோம். ஆகவே தனிமனிதனின் பகுத்தறிவு ஓர் எல்லைக்குட்பட்டதாயிருப்பதால் எதையும் பகுத்தறிவின் நேரடி சோதனைக்குட்படுத்திதான் கையாள வேண்டுமென்று நினைப்பதற்கில்லை. ஆகவே சாஸ்த்ரங்களை இத்தகைய சோதனை முறைகளுக்கு உட்படுத்தக் கூடாது என்று கூறுவது உண்டு.

பகுத்தறிவதிலே இருமுறைகள் உண்டு. சாஸ்த்ரங்களில் கூறியவை நமக்கு ஹிதமானவை என்ற திடமான நம்பிக்கையின் அடிப்படையில் ஆராயப் புகுவது ஒரு முறை. அப்படி நம்பிக்கையின்றி, அவை அஹிதமாகவும் இருக்கலாம் என்ற சந்தேஹத்துடனே, அப்படிதான் இருக்கும்

---

தாய்மார்கள் கை வைத்தியமாக கடைபிடிக்கின்றனர். முக்கியமாக இதற்கு பித்தம், கபம், வாயு முதலியவைகளைப் போக்கும் குணமுண்டு. ஜீரணசக்தியை உண்டு பண்ணும்.

கொத்துமல்லிக்கீரையைப் பருப்புடன் சேர்த்து வேக வைத்து கடைந்து சூடாக அன்னத்துடன் நெய்யும் விட்டு பிசைந்து உண்பதுமுண்டு. அல்லது இந்த கீரையை உப்பு, புளி, காரம் சேர்த்து துவையலாகச் செய்து தாளித்து அன்னத்துடன் சேர்த்து உண்பதுமுண்டு. இது கபாலத்தைப் பற்றிய சூட்டைத் தணிக்கும்.

இக்கீரையை நீர்விட்டு தளர அரைத்து பசுவின்பாலில் கலக்கி வடிக்கட்டி சர்க்கரைச் சேர்த்து காலையில் சாப்பிட்டுக் கொண்டு வர பயித்யம் நீங்கும்.

கீரையை அரைத்து வீக்கங்களுக்கும் காணுக்கடியினுல் ஏற்படும் தடிப்புக்களுக்கும் பூச குணம் காணலாம். கீரையை எண்ணெ விட்டு வதக்கி கட்டிகளின் மேல் வைத்துக்கட்ட கட்டிசீக்கிரம் பழுத்து உடையும். அல்லது கரைந்து மறையும். அரைத்த கீரையின் விழுதை வாயில் சிறிது நேரம் குதப்பி கொப்பளிக்க வாய் புண்ணும் தொண்டை எரிவும் குணப்படும். கொத்துமல்லி சட்னி நாக்குக்கு ருசிமட்டுமின்றி உணவை ஜீரணிக்கும் சக்தியும் உள்ளது.

தண்ணீரிலுள்ள பலகோளாறுகளைப் போக்கபலர் சிறிது கொத்துமல்லி விரையையும், ஜீரகத்தையும் போட்டுக் காய்ச்சிக் குடிக்கிறார்கள்.

தனியா சூர்ணம் உடம்புக்குமிக நல்லது. 1 பங்கு சந்தனத் தூள், 2 பங்கு கொத்தமல்லி விதை, 1 பங்கு

---

நெல்லி வற்றல், இவைகளை இடித்துப் பொடி செய்து சர்க்கரைச் சேர்த்து பிரதி தினம் இந்த சூரணத்தை காலை மாலை திரிகடிகப் பிரமாணம் சாப்பிட்டு வர தலைச் சுற்றல், நெஞ்செரிப்பு, இருமல் முதலியன குணமாகும்.

கொத்துமல்லி விதையையும் சோம்பையும் சேர்த்து இடித்து வைத்துக்கொண்டு சூர்ணத்தை தினம் இருவேளையும் சிறிது சிறிது சாப்பிட ஏப்பம், வாய்நாற்றம் முதலியன நீங்கும்.

பிரஸவித்த ஸ்த்ரீக்கு கொத்துமல்லி ஊரவைத்த ஜலத்தை தினம் ஒன்று அல்லது இரண்டு வேளைவீதம் கொடுத்து வர வயிற்று உப்பிசம், முதலியன நீங்கி சுறு சுறுப்பையுண்டு பண்ணும்.

காப்பிப்பழக்கத்தை விட இதுவும் ஒரு சிறந்த சாதனமாகச் சிலர் கைக்கொள்கிறார்கள். கொத்துமல்லி காப்பி என்று, விதையை லேசாக வறுத்துப்பொடி செய்து, பால் விட்டு சர்க்கரைச் சேர்த்து சாப்பிடுகிறார்கள். இது உடலின் ஆரோக்கியத்திற்கு மிகச்சிறந்ததாக கூறுவர்.

இவ்விதம் கொத்துமல்லி நமக்கு அநேக விதங்களில் உபயோகப்படுகிறது. நாம் ஆகாரத்தில் வாஸனைக்காகத் தான் சேர்த்து வருகிறோமே தவிற இதன் குணத்தை மறந்து விடுகிறோம். இது மற்றய மருந்துச் சரக்குகள் போல ஔஷதமாகப் பலமுறைகளில் உபயோகப்படுவதிலிருந்து இதன் உயர்வு உணரத்தக்கதாகும்.

---

**சோம்பலுக்கிடம் தராதே**



# மகான் காட்டும் மானுட இயல்பு.

ரா. கணபதி.

பசுவை வெறும் மிருகமாகவும், குருவை வெறும் மனிதனுகவும் நினைப்பவனுக்கு உய்வு கிடையாது என் பார்கள். பசுவும் குருவும் ஒன்றியது போல் காமதேனு வாக விளங்கும் ஸ்ரீ காமகோடி ஆசாரியனை எப்படி மானு டராக நினைப்பது ?

' காமதுகா பவ கமலே, காமகலே, காமகோடி காமாக்ஷி ' என்று அம்பாளைப் பிரார்த்திக்கிறுர் மூககவி. ' காமதேனு வாக இருந்து விரும்பியவற்றையெல்லாம் அருள்வாய் ' என்று வேண்டுகிறுர். 'வேண்டியவற்றையெல்லாம் வழங் கும் பசுவாக இருப்பாய் ' என்று வேதமும் தேவியைப் பிரார்த்திக்கிறது. ' உபதே கா இவாகரம் வ்ருணீஷ்வ துஹி துர்திவ: ' என்பது மந்திரம்.

எல்லா தேவதைகளும் காமதேனுவுக்குள் உறைவ தாக ஐதிஹ்யம். குருவையும் ஸர்வ தேவாத்ம ஸ்வரூபி என்று குறிப்பிடுவது வழக்கம்.

சஞ்சாரம் செய்வது பசுவின் இயல்பு. மக்களைத் தேடித் தேடிச்சென்று உபதேசம் தரும் பாங்கை குருவிடம் காண்கிறோம்.

பச்சையை யெல்லாம் உண்டு தூயவெண்பாலைப் பொழிவது பசு. கசப்பும் துவர்ப்புமான தழைகளைத் தின்று அவற்றை எவ்வாறே இன்சுவைப் பாலாக்கி தரு கின்றது. பச்சை தமஸின் நிறம். வெண்மையோ சுத்த ஸத்துவம். உலகின் தமஸை விட்டுச் சென்று ஏகாந்த தபஸை நாடாமலே, உலகினரோடு ஒருவராக ஒட்டி

---

மழை பெய்யும்போது ஓடாதே

வாழ்ந்தே உலகியலிலும் ஸத்வ ஞானத்தைப் பிழிந்து பொழிந்து வருகிறார் ஸ்ரீ ஆச்சார்யாள். உலகின் துவேஷங்களும் துயரங்களும் கூட அந்த ஸன்னிதானத்தில் சாந்த மயமாகின்றன — கசப்பும் துவர்ப்புமான தழையும் இனிய பாலாவது போல்.

இப்படிக் காமதேனுவாக இருக்கும் ஒரு குருவை மனிதராகப் பார்ப்பது சரியல்ல என்றே தோன்றும். ஆயினும் அந்த குரு மானுடர்களுக்குத் தங்களது மானுடத் தன்மையில் ஒருபிடிப்பை உண்டாக்கித்தரும் விதத்திலேயே நடந்து கொண்டாலோ ?

குருவை மானுடனாக நினைக்கக் கூடாது என்று சொல்லும்போது மானுடன் என்பவனை புலன் இழுக்கும் திசையில் சென்று காமக்ரோதாதிகளால் அலைப்புறும் ஒரு பிராணியாகவே நினைத்து, இப்படிப்பட்ட பிராணியாக ஆசானை எண்ணக்கூடாது என்று கொள்ளவேண்டும். ஆனால் மானுடன் இத்தகைய இழிதகைமைகள் மட்டும் கொண்டவனல்லன். அவனிடம் எத்தனையோ பெருமைகளும் குடிகொண்டுள்ளன. 'நரப்பிறவி பெறற்கரிது' என்றனர் பெரியோர். மானுடஜென்மம் வாய்ப்பதே ஒரு பெருமை என்று ஸ்ரீ பகவத்பாதரும் 'விவேக சூடாமணியின்' தொடக்கத்திலேயே கூறுகிறார்.

மனிதன் பெருமைகள் மட்டுமே பொருந்தியவன் அல்லன் என்பதற்காக வருத்தமோ வெட்கமோ கொள்ள வேண்டியதில்லை. மாமரத்தின் பட்டையும் இலையும் காயும் கசக்கத்தான் செய்யும். பழம் மட்டுமே இனிக்கும். அந்த பழத்தை வைத்தே மாமரத்துக்குப் பெருமை. கசப்பும் துவர்ப்புமான குணங்களுக்கிடையிலேயே மனிதன் இனித்து இருந்து விட்டால் போதும், அதுவே பெருமைதான்.

---

மின்னலைப் பார்க்காதே

மனிதனுடைய காமமும் குரோதமும் கூட நன்மை பயக்க முடியும் என்பதை நம் ஸ்ரீசரணர்கள் பல சமயங்களில் வெகு அழகாக உபன்யாஸம் செய்திருக்கிறார். மனிதர்களுக்குக் காமம் இருப்பதால்தான் பல ஜீவர்கள் தோன்றித் தங்கள் கர்மத்தைக் கழித்துக்கொள்ள வழி பிறக்கிறது என்று கூறியிருக்கிறார். ஒரு தவற்றைக் கண்டவுடன் கோபம் வருவதால் அது திருந்த வழி ஏற்படலாம். அந்த அளவில் கோபங்கூட நல்லதுதான் என்று சொல்லியிருக்கிறார்.

மனிதனாகப் பிறந்தவன் மனிதனாக இருப்பதில் அவமானமில்லை. ஆனாலும் அவன் மனிதனாகவே இருப்பதில் திருப்திபட்டுவிடாமல் தெய்வமாவதற்கு முயலவேண்டும். அவன் தன்னை தெய்வமாக்கிக் கொள்வதற்காகத்தான் ஆண்டவன் அவனைப் படைத்திருக்கிறான். அவன் தெய்வமேதான்; அறியாமையாலேயே தன்னை தெய்வத்தினின்று மாறுபட்ட மானுடனாக நினைத்துக் கொண்டிருக்கிறான், என்று உணர்த்தவே ஆசாரிய புருஷர்கள் அவதரித்திருக்கிறார்கள். ஆனால் மனிதனை தெய்வமாக்குவதற்காகவே அவர்கள் மனிதர்களாக வாழ்ந்து காட்டுகிறார்கள்.

ஞானவாஸிஷ்டத்தில் பிணம் சுடும் தடியைப்பற்றி வரும். சிதையைக் கிளறிக் கிளறிக் கொடுத்து நெருப்பாக்குவதும் ஒரு மரத்தடிதான். மற்ற தடிகள் எறிந்து போனபின் இந்தத் தடியையும் அக்னியில் எறிந்து விடுவான் வெட்டியான். மற்ற தடிகளை நெருப்பாக்குவதற்கும் ஒரு தடிவேண்டியிருக்கிறது. மற்ற மனிதர்களின் விகாரங்களைக்கொளுத்தி அவர்களைத் தெய்வமாக ஜொலிக்கச் செய்வதற்கும் ஒரு மனிதன் வேண்டியிருக்கிறது. மகாச்மசானத்தில் மக்களின் அவலங்களை எரிக்கும் மகாதேவன், அதற்கு உதவியாக வைத்துக்கொண்டிருக்கும் கிளறுகோலே ஆசாரியன்.

---

ச்மசான உதாரணம் சொன்னால் சிலருக்கு பீபத்ஸ மாக இருக்கலாம். மீண்டும் பசுவின் உதாரணத்துக்கே போவோம். கழிவுப்பொருட்கள் அசுத்தமானவை. ஆனால் பசுவின் கழிவுப் பொருளான கோமயமோ ஆசௌசங் களை யெல்லாம் போக்கும் சஞ்சீவினி. மானுடர்களின் அவல கர்மங்களை அமலமாக்கவே மானுடச்சட்டை தாங் கிய குருவாக வந்து கர்மம் புரிகிறான் இறைவன். மற்ற கர்மங்கள் கழிவுப்பொருள் எனில், அவற்றைக் கழுவ வும் கர்மம் தேவைப்படுகிறது. அந்த கர்மத்தைச்செய்ய வந்த மானுடச்சட்டை தாங்கிய சக்தியே குரு. இது தமிழ் முனிவர்கள் தந்த உதாரணம்.

நவநாகரிக காரர்களுக்கு கோமயம் கூட அருவருப் பாக இருக்கக் கூடும். இன்னோர் உதாரணம் பார்ப் போம். குழந்தைக்கு நடைபயிலுவிப்பதற்காக நாமும் நடை வண்டியைப் பிடித்துக்கொண்டு செல்கிறோம். குழந் தைக்குப் பேச பயிலுவிப்பதற்காக நாமும் 'ங்கு' சொல்கிறோம்.

மனிதனாக குரு தம்மைக்காட்டிக் கொண்டால் தான் மக்கள் அவரை நெருங்கிப் பழகமுடியும். உச்சிபீடத்தில் இருந்து கொண்டு அமாநுஷ்ய அற்புதங்களைச் செய்ப வர்களிடம் மக்கள் கூடுவர் என்பது வாஸ்தவம் தான். ஆனால் அமாநுஷ்ய சாதகரும் அன்பாய், தாயாய், இருந் தால் தான் மக்களால் அவரை நெருங்கி ஆறுதல் பெற முடியும். அற்புதத்தைக் கண்டு அதிசயிக்கலாம். ஆனால் ஆறுதல் வேண்டுமாயின் அதற்கு ஸௌலப்பியமானவர் தேவை. மனிதரோடு மனிதராக இருப்பவரிடம் இருந்து அன்றி வேறெவரிடம் இந்த ஸௌலப்பியத்தைக்காண முடியும் ?

மானுடமாகத்தோன்றும் ஒருவரிடத்தில் எல்லையற்ற தவசக்தியையும் கருணைசக்தியையும் ஞானசக்தியையும்

காணும்போதுதான் நாமும் அந்த நிலைக்கு உயரமுடியும் என்ற நம்பிக்கை பிறக்கும். நம்மைச் சேர்ந்த ஒருவரால் ஒருசெயற்கரிய செயல் புரிய இயலும்போதுதான் நாமும் அதைபின்பற்ற முயல்வோம். நம்மிலிருந்து மாறுபட்ட இனத்தின் பெருமைகளைப் பின்பற்றுவதில் நம் மனம் செல்லாது. பக்ஷி பறப்பதைப் பார்த்துவிட்டு மனிதன் அதேபோல் பறக்க முயலுவதில்லை. நமது மானுடத் தன்மைக்கு அப்பாற்பட்டவர்களிடம் இருக்கும் சிறப்புக்களை நாம்முன்மாதிரியாகக் கொள்வதில்லை. "ஆனைப்பட்ட அவரால் இப்படியிருக்க முடியும். ஆனால் நாம் அவரைப்போலவா ?" என்று சொல்லிவிட்டு நமது சிறுநெறியையே சார்ந்து நிற்போம். நம்மைப்போல் ஒருவரிடம் உத்தமமானகுணநலன்களைக்கண்டால் அதுவே நமக்கு வழிகாட்டியாக நிற்கிறது.

அன்பும் அறிவும் உருவான ஸ்ரீ சரணர்கள் அத்தகைய அன்புக்கும் அறிவுக்கும் நாமும் முயலலாம் என்று காட்டுவதற்கே மனித இயல்புகளை ஏற்றிருக்கிறார் எனலாம். அவருடைய உண்மை இயல்பு இன்னதென்று யாரும் சொல்ல முடியாது.

வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி

என்று 'கூறுடை மங்கையுடன் கூடிய ஏறுடையீசனைப்' பாடினார் மணிவாசகர். ஒரு வண்ணத்திலும் சேராத வெண்மை ஒளிச்சிதறலில் அத்தனை வண்ணங்களாகவும் ஆவதுபோல் ஓர் இயல்புமில்லாத அகண்டம் வேறு வேறு இயல்புகள் கொண்ட ஜீவராசிகளாகிறது. ஸ்ரீ சரணர்களும் அகண்டம்தான் ஆட்சேபமென்ன ? ஆகாசரூபிக்கு குணம் ஏது ? சரீரம் உள்ளவர்களுக்கு அதற்கான சில இயல்புகள் உண்டு. மனம் உள்ளவர்களுக்கு அதற்கான சில இயல்புகள் உண்டு. சரீரம்

கடந்தவருக்கு, மனம் கடந்தவருக்கு ஏது இயல்பு? 'பெரிய வாளின் திருஉள்ளக்கருத்து' என்று யாரேனும் குறிப் பிடும்போது எனக்கு வேடிக்கையாக இருக்கும். ஏனெனில் உள்ளம் என்ற பதம் ஒருவரின் உள்ளார்ந்த அந்தக் கரணத்தைக் குறிப்பிடுகிறது. பெரியவாளின் அந்த உள்ளில் அகண்ட வெளிதான் இருக்கிறது. அங்கே கருத்து ஏதும் எழும்பாது. ஆனால் அவர் பல கருத்துக் களை வெளியிடுகிறாரே, எண்ணங்களைக் கூறுகிறாரே, இவையெல்லாம் எங்கே எழுந்தன என்று கேட்கலாம். இவை எல்லாம் அவரது உண்மை நிலைக்கு வெளியே மேலெழுந்த வாரியாக அவரே இழுத்துப் போட்டுக் கொண்டிருக்கும் ஒருவெளிமனத்தில் எழும்புவைதான்.

இதேபோலத்தான் பெரியவாளுக்கு உடம்புசரியாக இல்லை என்று சொல்லும்போதும், மக்களின் கண்களுக் குப் புண்ணியம் தருவதற்காக அவர் காட்டுகிற ஒரு சரீரத் தைத் தான் சொல்கிறோம்.

இயல்பு அற்ற—நிர்குணமான— ஸ்ரீ சரணர்கள் மானுட தர்மங்களை. அனுஷ்டித்து நமக்கு வழிகாட்டுகிறார். அவரை நாம் தெய்வமாகப் பார்க்கத் தொடங்கி விட்டால் அவரைப் பூஜிப்போம், அவரிடம் அஞ்சுவோம், ஆனால் அவரை வழிகாட்டியாகக் கொண்டு அவரைப் பின்பற்ற மாட்டோம். 'தெய்வத்தின்போக்கு நமக்குச் சரிப்படுமா? என்று கேட்டு விட்டு நம் வழியிலேயேச் செல்வோம். எனவே தான் குருவையும் பசுவையும் தெய்வமாகவே பார்க்கவேண்டும் என்று ஆன்றோர்கள் கூறியபோதிலும் நாம் ஸ்ரீசரணரை மானுடராகவும் பார்க்கவேண்டிய அவசியமுண்டு என்கிறேன்.

இது முற்றிலும் நம் கையிலுள்ள விஷயம் அல்ல என்று எனக்கே தெரிகிறது. பெரியவாள் எவ்வளவு தான் மானுடமாக வேஷம் போட்டாலும் அவர் இந்நிலை

கடந்தவர் என்பதில் நிச்சயபுத்தி உள்ளவர்களால் அவரை மனிதராகப்பார்க்கமுடியாதுதான். ஆனால் இங்கு ஒரு விஷயத்தை தெளிவு செய்யவேண்டும். 'பெரியவாள் நடமாடும் காமாக்ஷி,' 'பெரியவாள் பேசும் தக்ஷிணாமூர்த்தி' என்றெல்லாம் சொல்வது இப்போது சர்வ ஸகஜமாகிவிட்டது. ஆனால் இதய அந்தரங்கத்தில் அவரை அப்படி உணர்ந்திருப்பவர்கள் அபூர்வமாகவே இருப்பார்கள். காமாக்ஷி என்றால் என்ன? தக்ஷிணாமூர்த்தி என்றால் என்ன? என்பது பற்றிச் சிறிதேனும் ஞானம் உள்ளவர்கள் அபூர்வமாகத்தான் இருப்பார்கள். அவர்களுக்குத்தான் பெரியவாள் மானுட நிலை கடந்தவர் என்ற நிச்சய புத்தி இருக்கும். நரம்புத் தளர்ச்சிக்காரர்கள் அதிகமாகி விட்ட இந்நாட்களில் அதீத உணர்ச்சிகளை உண்டாக்கிக் கொண்டு தாற்காலிகமாகத் திருப்தி பெறுவது சகஜமாகி விட்டது, மிகையேயாயினும் ஏதோ தாற்காலிகமாகவாவது நல்ல உணர்ச்சிகளை உண்டாக்கிக்கொள்ளும் வரையில் சிலாக்கியம்தான்.

உயர்ந்த ஆன்மாநுபவம் உள்ளவர்களும் பெரிய-வாளைப் பரம்பொருளாகப் பார்க்கிறார்கள். பற்பலநிலைகளில் பற்பல இயல்புகளை அவர் உண்மைபோல நடித்துக் காட்டும் அழகுஇந்த அநுபூதிமான்களுக்கு லீலைமயமாகவே தெரியும். ஒரே சமயத்தில் பல இயல்புகளை அவர் மேற்கொண்டிருப்பதாகத் தோன்றுவது திருவிளையாடலாகவே தெரியும்.

மல்லாநாமசனிர் ந்ருணாம் நரவர: ஸ்த்ரீணாம் ஸ்மரோமூர்த்தி-<br>மான்<br>கோபாநாம் ஸ்வஜநோ(அ)ஸதாம் க்ஷிதிபுஜாம் சாஸ்தா ஸ்வபித்-<br>ரோ சிசு: |<br>ம்ருத்யுர்போஜபதேர் விராட விதுஷாம் தத்வம் பரம்யோகினாம்<br>வ்ருஷ்ணீனாம் பரதேவதேதி விதிதோ ரங்கம் கத: ஸாக்ரஜ: ||

---

அவன் பெயரையும் கூறாதே

கம்ஸனின் சபாமண்டபத்தில் பலதேவனுடன் பிர-வேசித்த கண்ணனை இப்படி வருணிக்கிறார் பிர்ம்மநிஷ்டர். அதாவது கண்ணபெருமான் கம்ஸனின் மல்லர்களுக்கு இடியாகவும், மற்ற ஆண்மக்களுக்கு புருஷோத்தமனாக வும், பெண்டிருக்கு மன்மதனாகவும், ஆயர்களுக்கு பந்து வாகவும், கெட்டமன்னர்களுக்கு தம்மைத் தண்டிப்பவனாக வும், பெற்றோருக்குப் பிள்ளையாகவும், கம்ஸனுக்கு ம்ருத்யுவாகவும், அஞ்ஞானிகளுக்கு பலமற்ற குழந்தை யாகவும், யோகிகளுக்கு மேலான மெய்ப்பொருளாக வும், விருஷ்ணி குலத்தவருக்கு பரதேவதையாகவும் தோன்றினான். ஒரே சமயத்தில் பலவாகத் தெரியும் பெரியவாளை எண்ணும்போது இது நினைவு வருகிறது. ஆனால் சில வித்தியாசங்களும் உண்டு. மல்லருக்கும் கம்ஸனுக்கும் கண்ணன் பரமவைரியாகத் தோன்றியது போல் எவர் கண்ணுக்குமே பெரியவாள் பகைவராகத் தெரியமாட்டார். பெண்டிருக்குக் காமனாகத்தோன்றினான் கண்ணன். இவரோ காமகோடியானதால் அப்படித் தோன்றமாட்டார், கண்ணன் புருஷோத்தமனாக தெரிந்தது போல் இவர் பெண்களில் பரம உத்தமமான அன்னையாக தெரிவார். கண்ணனும் கூடப் பரதேவதையாக விருஷ்ணி குலத்தவருக்குத் தோன்றினான் என்னும் போது பிரம்ம நிஷ்டர் அன்னைத் தெய்வத்தைத்தான் சொல்லியிருப் பாரோ என்னவோ? கண்ணன் யோகிகளுக்குப் பரம தத்துவமாகத் தெரிவான் என்று கூறியபின் அதற்கும் மேலானது என்று சொல்லாமற் சொல்வது போல், வருணனையின் முடிவில் அவனை பரதேவதையாகச் சொல்வது மிகவும் நுணுக்கமான அழகு வாய்ந்தது. நிர்குணமான பரமதத்துவம் கருணைக் கும் அப்பாற்பட்டது. ஆனால் நமக்கோ கருணாமூர்த்தி தானே வேண்டும்? கருணாமூர்த்தியைத்தான் பரதேவ தை என்கிறோம்.

---

வேறு பெயரிட்டு அழை

# ஸ்ரீ கூர்ம புராணம்.

## வியாஸ கீதை. (மார்கழித்தொடர்ச்சி)

வித்யை, புண்யகர்மா, தபஸ், பந்துத்வம், செல்வம் ஆகிய இவைகள் ஒருவரைப் பூஜிப்பதற்கேற்ற காரணங்களாம். இவைகளில் முன்னே இருப்பவை பின்னிருப்பவைகளை விடச்சிறந்தவைகளாம். இவை மூன்று வர்ணங்களுக்குள் கவனிக்கத் தக்கவை. பிராம்மணன் ஸ்த்ரீ ராஜா கண்ணில்லாதவன் கிழவர் சுமை தூக்கி வருபவர் ரோகி பலமில்லாதவர் ஆகிய இவர்களுக்கு மற்றவர் வழியை விட்டுத் தாங்கள் விலகி வழி கொடுக்கவேண்டும். பிரும்மசாரி பிக்ஷை எடுத்த அன்னத்தை முதலில் குருவினிடம் கொடுத்து அவர் உத்தரவு கொடுத்தபின் அதைப் புஜிக்கவேண்டும். பதிதன் வேதமறியாதவன் தேவபூஜை செய்யாதவன் முதலியவர்கள் வீட்டில் பிக்ஷை வாங்கக் கூடாது. பங்காளி பந்து முதலியவர்கள் வீட்டில் பிக்ஷை வாங்கக்கூடாது. சரீர சுத்தியுடனும் மநச்சுத்தியுடனும் மௌநமாகக் கிழக்கு அல்லது மேற்கு முகமாக உட்கார்ந்து சாப்பிடவேண்டும். இப்படி நியமத்துடன் புஜிப்பவர் உபவாஸமிருந்த பயனைப் பெறுவர். வடக்குமுகமாக உட்கார்ந்து சாப்பிடலாகாது. புஜிப்பதற்கு முன் காலை அலம்பி இரண்டுமுறை ஆசமநம் செய்யவேண்டும். சாப்பிட்ட பிறகு இரண்டு முறை ஆசமநம் செய்ய வேண்டும்.

### ஆசமநம்.

தூங்கி எழுந்தபிறகும் குடிக்கத்தக்கதைக் குடித்த பிறகும் ஸ்நாநம் வழிநடை உதட்டைத் தொடுதல் வஸ்த்ரத்தைக் கட்டிக்கொள்ளுதல் ரேதஸ் மூத்ரம் மலம் ஆகிய இவைகளைக் கழித்தல், தகாதவர்களுடன் பேசுதல் காரித் துப்பல் முதலியவைகளைச் செய்தபிறகும், அத்யயந ஆரம்ப காலத்திலும் சண்டாளன் மிலேச்சன் முதலியவர்களுடன் பேசியபின்பும் எச்சிலுடனிருக்கும் ஸ்த்ரீயுடனும் நான்காம் வர்ணத்தவர்களுடனும் பேசினாலும் எச்சிக் கையுடனிருப்பவனைத் தீண்டினாலும் கண்ணீர்

அல்லது ரத்தம் சிந்தினாலும் கச்சமல்லது பெண்கள் இக்குமுடிச்சு கேசம் பழைய வஸ்த்ரம் ஆகிய இவை களைத் தொட்டாலும் உடனே ஆசமநம் செய்யவேண்டும். உஷ்ணம் உப்பு நுரை முதலிய தோஷமில்லாத ஜலத்தில் ஆசமநம் செய்யவேண்டும். மேற்கு அல்லது தெற்குத் திக்காகச் செய்வதும் தலை அல்லது கழுத்தில் வஸ்த் ரத்தைப் போர்த்துக்கொண்டு செய்வதும் கச்சமில்லாமல் செய்வதும் கால் அலம்பாமல் செய்வதும் தலைக்குட்டை அல்லது பாதுகையை அணிந்து செய்வதும் அவிழ்ந்த மயிருடன் செய்வதும் ஜலத்தில் நின்றுகொண்டும் தாரை யாக விழும் ஜலத்தில் செய்வதுமான ஆசமநம் பயனற்ற தாகும். இடது கையினால் எடுத்த ஜலத்தினாலும் ஆஸநத்தில் உட்கார்ந்து கொண்டும் முழங்கால்களுக்கு வெளியில் கைகளை வைத்துக்கொண்டும் வைச்யர் நான்காம் வர்ணத்தவர் கொடுத்த ஜலத்தாலும் ஏதாவது ஓர் ரஸங்கலந்த ஜலத்தாலும் விரல்பட்ட ஜலத்தாலும் ஆசமநம் செய்யக்கூடாது. மநதை வேறிடத்தில் வைத் துக்கொண்டு ஆசமநம் செய்யக்கூடாது. பிராம்மணர்கள் ஹிருதயம் வரை செல்லும் நீராலும் க்ஷத்ரியர் கழுத்து நிலையும் நீராலும் வைச்யர் வாய் நிலையும் நீராலும் ஆச மநம் செய்யவேண்டும். ஸ்த்ரீ நான்காம் வர்ணத்தவர் ஜலத்தைத் தொட்டால் போதும். மும்முறை ஜல மருந்தி விரல்களின் அடிபாகத்தால் உதடுகளைத் துடைக்க வேண்டும்.

கட்டவிரலாலும் மோதிரவிரலாலும் இருகண்களைத் தொடவேண்டும். கட்டவிரலாலும் ஆள்காட்டி விரலாலும் மூக்கைத் தொடவேண்டும். சுண்டிவிரலாலும் கட்டைவிர லாலும் காதுகளைத் தொடவேண்டும். எல்லா விரல்களா லும் கைகளையும் உள்ளங்கையால் ஹிருதயத்தையும் தொடவேண்டும். தலையையும் நாபியையும் எல்லா விரல் களாலும் அல்லது கட்டவிரலால் தொடலாம். மும்முறை ஆசமநம் செய்தால் மும்மூர்த்திகளும் ஸந்தோஷப்படுகின் றனர். உதட்டைத் துடைப்பதால் கங்கையும் யமுனையும்

கண்களைத் தொடுவதால் சந்த்ர ஸூர்யர்களையும் மூக்கைத்தொடுவதால் அச்விநிதேவர்களும் காதுகளைத்தொடுவதால் அக்நியும் வாயுவும் ஹிருதயத்தைத் தொடுவதால் ஸகல தேவர்களும் தலையைத் தொடுவதால் வேத புருஷனும் ஸந்தோஷம் அடைகிறார்கள். ஆசமநம் செய்யும் பொழுது அந்த ஜலம் நமது வேறெந்த அவயங்களில் பட்டாலும் அது அசுத்தமாகாது. மதுபர்க்கம் ஸோம ரஸம் தாம்பூலம் பழம் கிழங்கு கரும்பு முதலியவைகளைப் பக்ஷித்தால் ஆசமநம் செய்யவேண்டியதில்லை. அநிகமான அன்னம் அல்லது ஜலத்தை எடுத்துச் செல்லும் பொழுது நமது சரீரத்தில் எச்சில்பட்டால் அந்த பொருள்களைக் கீழே வைத்துவிட்டு நாம் ஆசமநீயம் செய்து அவைகளை ஜலத்தினால் ப்ரோக்ஷித்துவிட்டால் அவை சுத்தமாகும்.

எந்த பதார்த்தத்தையும் கையில் வைத்துக்கொண்டு ஜல மலங்களைக் கழிக்கக் கூடாது. ஆனால் ஆரண்யம், இரவு ஜலமில்லாத இடம் திருடர் புலி முதலியவர்களால் கஷ்டமுண்டாகும் காலம் ஆகியசமயங்களில் கையிலுள்ள பொருளுடன் ஜலங்கழித்தால் அவை அசுத்தமல்ல. ஜல மலங் கழிக்கும்போது தலையை வஸ்திரத்தால் மூடிக் கொண்டு பகலில் வடக்கு முகமாகவும் இரவில் தெற்கு முகமாகவும் உட்காரவேண்டும். ஜலமலங்களை நேராகப் பூமியில் விடாமல் உலர்ந்த சிறகுகளைப் போட்டு அதன் மேல் அவைகளைக் கழிக்கவேண்டும். நிழல் கிணறு குளம் நதி கோசாலை ஆலயம் தெரு வழி சாம்பல் அக்நி வீடு சுடுகாடு உழுதபூமி மரம் புத்து கோவில் புல் முதலிய இடங்களில் ஜலமலங்களைக் கழிக்கக்கூடாது. நின்று கொண்டோ வஸ்த்ர மில்லாமலோ மலைமீதோ ஜந்துக்களுள்ள பள்ளத்திலோ உத்யாநத்திலோ காலில் பாதுகை அணிந்தோ நடந்துகொண்டோ வாஹநத்தின் மீதிருந்தோ நதி நக்ஷத்திரம் ஜலம் சந்த்ர ஸூர்ய அக்நி குரு பிராஹ்மணன் முதலியவைகளுக்கு எதிர்முகமாகவோ ஜலமலங் கழிக்கக்கூடாது. மண்ணையும் ஜலத்தையும் கொண்டு

துர்நாற்றம் போகும் வரை ஜலமலத் துவாரங்களையும் கைகால்களையும் சுத்தி செய்யவேண்டும்.

## சிஷ்ய தர்மம்.

சிஷ்யன் எப்போதும் சுசியாயிருந்து ஆசார்யர் கூப்பிட்ட உடன் கல்விகற்கப்போகவேண்டும். உட்காரென்று குரு கூறிய பிறகு நமஸ்காரம் செய்துவிட்டு அவருக்கு எதிர்முகமாக உட்காரவேண்டும். குரு நிற்கும்பொழுது உட்காரக்கூடாது. குரு எதிரில் படுக்கக்கூடாது. குரு பெயரைக் கூறக்கூடாது. அவர் எதிரில் இஷ்டமானபடி கை கால்களை நீட்டி உட்காரக் கூடாது. குருவைப்போல் நடிக்கக் கூடாது. குருவை நிந்திக்குமிடத்தில் கூட இருக்கக்கூடாது. இரண்டு காதுகளையும் மூடி வேறிடம் செல்ல வேண்டும். தூரத்திலிருந்து குருவைப் பூஜிக்கக்கூடாது. பெண்கள் எதிரிலும் கோபத்துடனும் குருவை அர்ச்சிக்கக் கூடாது. குருவிற்கு வேண்டிய ஜலம் தர்ப்பம் புஷ்பம் ஸமித் முதலியவைகளைத் திநந்தோறும் கொண்டு தர வேண்டும். அவர் வஸ்த்ரத்தைத் தோய்த்து அவர் சரீரத்தை அழுக்குபோகத் தேய்க்க வேண்டும். அவரது படுக்கை பாதுகை பாத்ரம் முதலியவைகளை உபயோகிக்கக்கூடாது. குருவின் உத்திரவின்றி எங்கும் போகக் கூடாது.

அவர் எதிரில் கோட்டுவாய் விடுவது விளையாட்டாகப் பேசுவது கழுத்தில் வஸ்திரத்தைப் போட்டுக்கொள்வது முதலியன கூடாது. அவருடன் சமமான ஆஸநத்தில் உட்காரக் கூடாது. சந்தநம் மாலே கண்ணுடி முதலிய போக வஸ்துக்களை உபயோகிக்கக்கூடாது. பெண்கள் இருக்குமிடத்திற்குப் போகக்கூடாது. அதிக நித்திரை பாட்டு ஆட்டம் சூதாட்டம் ஜநாபவாதம் கோள் சொல்லல் பிராணி ஹிம்சை முதலியன கூடாது. ரஹஸ்யமாக உட்கார்ந்து கொண்டு எவருடனும் பேசக்கூடாது. மநதிஞல் கூட குருத்ரோகம் எண்ணக்கூடாது. ஆனல் கர்வங் கொண்டு அகார்யத்தைச் செய்யும் குருவை த்யாகம்

செய்துவிடலாம். குரு மனைவியையும் குரு புத்ரர்களை யும் குருவைப் போல் எண்ண வேண்டும். குருபத்நிக்கு மையிடுவது எண்ணெய் தேய்ப்பது கைகால்களைப் பிடிப் பது தலைவாறுவது முதலிய காரியங்களைக் குரு பத்நி செய்யச் சொன்னாலும் செய்யக்கூடாது. குரு பத்நி பால்யமாக இருந்தால் நமஸ்காரம் செய்து அவள் காலைத் தொடக்கூடாது. நன்றாகப் பணிவிடை செய்துவரும் நல்ல சிஷ்யனுக்கு குரு ஓராண்டிற்குமேல் வித்யை கற்பிக்காமலிருந்தால் நரகமடைவார். சுத்தனாக இருந்து கொண்டு மூன்று ப்ராணாயாமம் செய்து வேத ஆரம்பத் திற்கு முன்னும் பின்னும் பிரணவத்தைக்கூறி அத்யயநம் செய்யவேண்டும். ஸகல பிராணிகளுக்கும் வேதமென் பது கண்ணாகும்.

ஒவ்வோர் வேதத்திலும் ரிக் யஜுஸ் ஸாமம் என்ற வேத பாகங்களிருக்கின்றன. ரிக்கை நியமத்துடன் அத்யயநம் செய்தால் பாலினால் ஹோமம் செய்து தேவதைகளை ஸந்தோஷப்படுத்தியதாகும். அங்ஙனமே யஜுஸ்ஸை அத்யயநம் செய்தால் தயிரால் தேவர் களுக்கு ஆஹுதி செய்வதாகும். ஸாமத்தை அத்யயநம் செய்தால் நெய் ஆஹுதி செய்ததாகும். இவைகளால் ஸந்தோஷமடைந்த தேவர்கள் அத்யயநம் செய்பவனது இஷ்டத்தைப் பூர்த்தி செய்கின்றனர். வேதாகமங் களையும் இதிகாஸ புராணங்களையும் பாராயணம் செய்தால் ஒரு தினம் செய்த பாராயணம் ஒரு மாஸம் வரை தேவதைகளை ஸந்தோஷப்படுத்தும். இங்ஙனம் தினந்தோறும் பிரும்மசாரி க்ருஹஸ்தன் வானப்ரஸ்தன் ஆகிய மூவரும் செய்வேண்டும். இதே பிரஹ்ம யக்ஞ மெனப்படும்.

### காயத்ரீ.

தினந்தோறும் காலை வேளையில் மிக சுத்தனாக காயத்ரியை ஜபம் செய்யவேண்டும். ஆயிரம்முறை ஜபம் செய்வது உத்தமம், நூறு ஆவர்த்தி ஜபம் செய்வது

மத்யமமாகும். அதமபக்ஷமாக ஆபத்துக் காலத்தில் கூடப் பத்துமுறையாவது ஜபம் செய்யவேண்டும். இது ஜப யக்ஞ மெனப்படும். பிரஹ்மா காயத்ரியின் மஹி மையை அறிய ஓர் புறத்தில் நான்கு வேதங்களேயும் மற்ருேர் புறத்தில் காயத்ரியையும் வைத்து நிறுத்தார். காயத்ரியே மிக்க பாரமுள்ளதாகக் காணப்பட்டது. மும் மூர்த்திகளே மூன்று வியாஹிருதிகளாக ஆனுர்கள். ஆதலின் அவைகளே முதலில் கூறவேண்டும். அதற்கும் முன்னதாக பிரணவத்தை உச்சரிக்கவேண்டும். மூன்ருவ தாக மூன்று பாதமுள்ள வேதமாதாவான காயத்ரியை ஜபிக்கவேண்டும். காயத்ரியின் அர்த்தத்தை அறிந்து எழுத்துப் பிழையில்லாமலும் அபஸ்வரமில்லாமலும் சுசி யாக ஜபிப்பவர் நற்கதி அடைவது ஸத்தியம். காயத் ரியைவிட சிறந்த மந்த்ரம் இல்லே.

## வேதாத்யயநம்.

ச்ராவணமாஸ பௌர்ணமியில் அல்லது ஆஷாட ப்ரோஷ்டபதிகளில் வேதங்களுக்கு உபாகரணம் என்ற ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். தை பௌர்ணமியில் உத்ஸர்ஜநமெனும் ஸம்ஸ்காரம் செய்யவேண்டும். மாக மாஸ சுக்ல பிரதமையில் வேதங்களுக்குப் பிரீணநம் என்ற கர்மாவைச் செய்யவேண்டும். ஆவணி முதல் தை வரை வேதாத்யயநம் செய்வதற்கு ஏற்ற காலமாகும் சுக்ல பக்ஷங்களில்தான் வேதங்களேக் கற்கவேண்டும். கிருஷ்ணபக்ஷங்களில் வேத அங்கங்களேப்பயிலவேண்டும். அஷ்டமி சதுர்தசி பர்வம் பிரதமை முதலிய சிலகாலம் அநத்யயந மெனப்படும். அச்சமயம் மனிதர்களுக்குப் பல ஹீநம் ஏற்படுகிறது. அந்த சமயத்தில் நாம் அத்யயநம் செய்தால் ராக்ஷஸர்கள் நம்மை கஷ்டப்படுத்துவார்கள். ஆதலால் அநத்யாய காலங்களில் வேதம் ஓதக்கூடாது. வேதாங்கங்களுக்கும் இதிஹாஸ புராணங்களுக்கும் பர்வம் ஒன்றே அநத்யாயமாகும். வேதத்தைக் கற்று அர்த்தமுணராமல் இருப்பவன் நான்காம் வர்ணத்தவன்

ஆவான். ஸாவித்ரீ சதருத்ரீயம் வேதாங்கம் இவைகளைத் திநந்தோறும் ஜபிக்கவேண்டும்.

## கிருஹஸ்த தர்மம்

நற்குலத்திலுதித்த லக்ஷணம் நிறைந்த பெண்ணைத் தர்மம் செய்யவும் ஸத்ஸந்ததியை உண்டு பண்ணவும் விவாஹம் செய்துகொள்பவன் கிருஹஸ்தனாவான். ஸ்வர்ண குண்டலம் குடை பாதுகை இரண்டு யக்ஞோபவீதம் வேணு தண்டம் வெண்மையான வஸ்த்ரம் முதலியவைகளை அவன் தரிக்கவேண்டும். காரணமில்லாமல் கேசத்தையும் நகங்களையும் வளர்க்கக்கூடாது. ஷஷ்டி அஷ்டமி ஏகாதசீ துவாதசி அமாவாஸ்யை பௌர்ணமி ஆகிய இந்த திநங்களில் ஸ்த்ரீ ஸங்கமம் கூடாது. கிருஹ்ய கர்மாக்களையும் யக்ஞங்களையும் செய்யவேண்டும். தன்னைவிட உயர்ந்தவர்களுடன் ஸ்நேஹம் செய்யவேண்டும். ஈச்வரபூஜை தவறாமல் செய்யவேண்டும். மனைவிக்கு ஆபரணம் செய்து கொடுக்கவேண்டும். தான் செய்த தர்மத்தை எவரிடமும் சொல்லக்கூடாது. பாபத்தை மறைக்கக்கூடாது. ஸர்வ பிராணிகளிடமும் அன்புகொள்ளவேண்டும். தனது முன்னோர் கைப்பற்றி வந்த தர்மத்தையும் ஆசாரத்தையும் விடாமல் அனுஷ்டிக்க வேண்டும். காயத்ரீ ஜபம் சிராத்தம் தந்தை தாய் பணிவிடை நித்யகர்மா இவைகளை விடாமல் செய்பவர் பிரும்மலோகஞ் செல்வர். வீட்டிலிருப்பதால் ஒருவன் கிருஹஸ்தனாகமாட்டான். அவ்வாச்ரமத்திற்குரிய கர்மாக்களைத் தவறாமல் செய்தால்தான் கிருஹஸ்தனாகமுடியும். க்ஷமை தயை விக்ஞானம் ஸத்யம் இந்திரியங்களை அடக்குதல் மனதை அடக்குதல் வேதாந்த ஞானம் ஆகியவைகள் உள்ளவனே பிராம்மணன். கூடிய வரையில் நமக்கு சாஸ்த்ரம் விதித்த கர்மாக்களை இடைவிடாமல் செய்து, செய்யக் கூடாதென்று நிஷேதம் செய்த கர்மாக்களை விட்ட கிருஹஸ்தன் ஸம்ஸார பந்தத்திலிருந்து விரைவில் விடுபடுவான்.

பிறர் நமக்குத் தீங்கிழைத்தபோது உண்டாகும் கோபத்தை அடக்குவதே க்ஷமை. தனது துன்பத்தைக் கண்டு மனம் இளகுவதுபோல் துன்பப்படுபவரைக்கண்டு இளகுவது தயையாம். இதுதான் ஸகல தர்மங்களுக்கும் முதல் ஸாதநம். பதினன்கு வித்தைகளைக் கற்பது விக்ஞாந மெனப்படும். மஹாதேவனை உண்மையாக உணர்வதே வேதாந்த ஞானமாகும். தர்மானுஷ்டாநம் செய்ய ஸாதனமாக இருப்பதால் இவ்வுடலை நன்கு ரக்ஷிக்கவேண்டும். தர்மாத்யாயத்தில் கூறிய விஷயத்தைப் .படிப்பவரும் கேட்பவருமே நற்கதி பெறுவாரெனில் அனுஷ்டிப்பவரைபற்றிக் கேட்கவேண்டுமா ? புல்லாயினும் கீறையாயினும் மண்ணுயினும் பிறரிடம் வாங்காமலிருப்பது நலம். ராஜாவிடமிருந்தும் நான்காம் வர்ணத்தாரிடமிருந்தும் தாநம் வாங்கக்கூடாது. புஷ்பம் கீறை தீர்த்தம் கட்டை கிழங்கு புல் பழம் ஆகிய இவைகளைக் கூட சொந்தக்காரர் கொடாமல் நாமே எடுத்துக் கொண்டால் அது திருடேயாம்.

இவைகள் தர்மத்திற்காக பயன்படுமானல் யஜமாநன் கொடுக்காவிட்டாலும் திருடாகாது. வழியில் இருக்கும் எள்ளு பயர் முதலியவைகளில் பசிக்காக ஓர் பிடி யஜமானைக் கேளாமல் எடுத்துப் புசித்தால் அது பாபமாகாது. தர்மத்தை வியாஜமாகக் கொண்டு மேற்கண்ட பொருள்களைத் தனக்கு உபயோகித்துக் கொள்பவர் நரகம் செல்வர். பாஷண்டிகளை வாக்கினல் கூட பூஜிக்கக் கூடாது. தேவத்ரோஹத்தைவிட குருத்ரோகம் கோடி மடங்கு அதிக பாபம். அதைவிட நாஸ்திக்யம் கோடிமடங்கு அதிக பாபம். தகாதவர்களுடன் மணஞ் செய்தாலும் விதித்த கர்மங்களை விட்டாலும் வேதாத்யயநம் செய்யாததாலும் பொய் பரஸ்த்ரீகமநம் தகாததைச் சாப்பிடுவது வேதமறியாதவனிடம் தாநம் செய்வது ஆகிய இவைகளாலும் நற்குலம், தீயகுலம் ஆகும். பாபிகளும் நோய்களும் நிறைந்த இடத்தில் வஸிக்கக் கூடாது.

Pri ted & Published by A Venkataraman at Sri Meenakshi Press, Kadavasal.
Editor : Srivathsa, V. Som:dev Sarm',